உ

கணபதி துணை.

# பாலபாடம்

## இரண்டாம் புத்தகம்.

### க. சபைப் பழக்கம்.

அக்கிராசனாதிபதி-மேலிடத்திலிருக்கும் தலைவர்.
வார்த்தை-சொல்.
வரித்தல்-அழைத்தல், தெரிதல்,
அமைதல்-கீழ்ப்படுதல்.
ஆசனம்-இருக்குமிடம்.
உபசாரம்-மரியாதை.
பிரபுத்துவம்-பிரபுத் தன்மை.
பிரபு-முன்னானவன்.

சபையிலே நீ பேசும்பொழுது, எழுந்து மரியாதையோடு, சபையார்களை மிக உயர்த்தியும், உன்னை மிகத் தாழ்த்தியும், பேசல்வேண்டும். ஒருவர் பேசும்போது மற்றவர்கள் கேட்டுக்கொண்டு இருத்தல் வேண்டும். எல்லாரும் ஒரே நேரத்திற் பேசல் ஆகாது. சொல்லத் தகாத வார்த்தைகளைச் சபையிலே சொல்லல் ஆகாது. அவசியம் இல்லாமற் சிரித்தலும் ஆகாது.

சபைக்கு அக்கிராசனாதிபதி ஒருவர் வரிக்கப் பட்டிருந்தால், அவருக்கு எல்லாரும் அமைந்து ஒழுகல் வேண்டும். சபையிலே உயர்ந்த ஆசனத்திற்

காலை வைத்துக்கொண்டு இருத்தலும், படுத்துக்கொள்ளுதலும், தனக்கு மாத்திரம விசேஷ மரியாதை செய்வித்துக்கொள்ளுதலும், சுருட்டுப் பிடித்தலும் ஆகாவாம். சபைக்கு அழைக்கப்பட்டவர்கள், தவறாமல் நியமிக்கப்பட்ட நேரத்துக்கு வந்துவிடுதல் வேண்டும்.

சபை கூட்டினவர்கள், வந்தவர்களை மரியாதை செய்து அழைத்துக்கொண்டுபோய் அவரவர்களுக்கு உரிய இடங்களிலே இருத்தக் கடவர்கள். போம்போது உபசாரஞ் செய்து அனுப்பக் கடவர்கள். கல்வியினாலும் வயசினாலும பிரபுத்துவத்தினாலும் மேம்பட்டவர்களுக்குத் தவறாது மரியாதை செய்தல் வேண்டும.

எல்லாம அறிந்தவராயினும் சபைப் பழக்கம் இல்லாதவர் ஒன்றும அறியாதவரே யாவர்.

---

## ௨. மனுநீதிகண்ட சோழர்.

அரசுசெய்தல்-ஆளுதல்.
குமாரனை-புதல்வனை.
இறத்தல்-சாதல்.
நிகழ்ந்ததை-நடந்ததை.
பிராயச்சித்தம்—பாவத்தைப் போக்கும் வழி.
இராசமாளிகை-அரசனுடைய வீடு.
துயருறுதல்-துன்பப்படுதல்.

மனுநீதிகண்ட சோழமகாராசா திருவாரூரிலே இருந்து அரசு செய்தார். அந்தக் காலத்திலே ஒரு நாள் அவருடைய குமாரன் தேரில் ஏறிப் போகும்

போய், ஒரு பசுக்கன்று அத்தேர்க்காலில் அகப்பட்டு இறந்தது. அதன் தாய்ப்பசுவானது, கதறிக்கொண்டு போய், இராச மாளிகை வாயிலில் கட்டப்பட்ட மணியைத் தன் கொம்பினால் அடித்தது. இராசா அது கேட்டு வெளியில் வந்து விசாரித்தபோது, நிகழ்ந்தவைகளை அங்கு நின்றவர்கள் சொன்னார்கள். உடனே இராசா கோபங்கொண்டு, இக்கொலைப்பாவஞ் செய்தவனை யாது செய்தல் வேண்டும் என்று மந்திரிமாரை வினவ, அவர்கள், இப்பிள்ளை முடிக்குடிக்கு ஒருவனாயிருக்கின்றான் என்றும், இராசாவின் பிள்ளை என்றும் நினைந்து, "இப் பாவத்திற்குப் பிராயச்சித்தஞ் செய்தால் தீரும்" என்றார்கள். அரசர் கன்றை இழந்த பசுவின் துயரம் என் மகனைக் கொண்டு பிராயச்சித்தஞ் செய்வித்தால் தீருமோ என்று நினைந்து, இப்பசு தன் கன்றை இழந்து துயருறுவது போல, நானும் என் மகனை இழந்து துயருறுவேன் என்று சொல்லி, தாமே தேரில் ஏறித் தம் மகனைத் தேர்க்காலில் வீழ்த்திக் கொன்றார்.

---

## ௫. கல்வியளவு.

கற்றல்-படித்தல். அனேகம்-பல.
வித்துவான்-படித்தவன். கர்வம்-அகங்காரம்.

ஒருவன் வித்துவானாகிய தன் சிநேகிதனைப் பார்த்து "உம்முடைய அறிவு எவ்வளவு? உமக்கு எல்லா வித்தைகளும் வருமா?" என்றான். அதற்கு அவ்வித்துவான் "நான் வித்தை கற்கத் தொடங்கிய முதல் வருஷத்தில் எனக்கு எல்லாந் தெரியும், இரண்டாம் வருஷத்தில் கொஞ்சந் தெரியும், மூன்றும்

வருஷத்தில் ஒன்றுந் தெரியாது; வருஷஞ் செல்லச் செல்ல எனக்கு அறியாமை அதிகப்படுகின்றது. எவ்வளவுக்கு அதிகமாக நான் படிக்கின்றேனோ, அவ்வளவுக்கு நான் அறிவிலே குறைந்தவனாக எனக்குத் தோன்றுகின்றது" என்றான்.

அதிகங் கற்றவர்களே இன்னுங் கற்க வேண்டியனவாய் அநேகம் உண்டு என்று அறிவார்கள். மற்றவர்கள் கல்வி இவ்வளவுதான் என்று எண்ணுவார்கள். ஆதலினாலன்றோ அதிகங் கற்றவர்கள் ஒருபோதுங் கர்வங் கொள்ளுகிறார்களில்லை.

---

## ௪. உலோகம்.

பஞ்ச-ஐந்து. நாணகம்-காசு.
நச்சுத்தன்மை-விஷத்தன்மை.

பொன் வெள்ளி செம்பு இரும்பு ஈயம் என்னும் ஐந்தும் பஞ்சலோகம் என்று சொல்லப்படும். எல்லா லோகங்களிலும் பொன் மிக விலையுயர்ந்தது. நாணகங்களும் உயர்ந்த ஆபரணங்களும் பொன்னினாலே செய்யப்படுகின்றன. பொன் மிகக் கனங்கொண்டது. பொன்னிலே களிம்பு இல்லை. பொன் இந்தியா ஔஸ்திரேலியா முதலான இடங்களில் விளைகின்றது.

பொன்னுக்கு இரண்டாவது வெள்ளி. வெள்ளி நாணகத்துக்கும், ஆபரணத்துக்கும், சில பாத்திரங்களுக்கும், உபயோகப் படுகின்றது. வெள்ளி வெண்பொன் என்றும் பெயர்பெறும்

செம்பு கப்பல் வேலைக்கும் பாத்திர வேலைக்கும் உபயோகப்படுகின்றது. செம்பிலுள்ள களிம்பு நச்சுத்தன்மை உடையது.

மற்றைய எல்லா லோகங்களிலும் மிக மலிவானது இரும்பு. ஆயுதங்கள் யந்திரங்கள் முதலானவைகள் எல்லாம் இரும்பினால் செய்யப்படுகின்றன. முற்காலத்தில் மரத்தினால் செய்யப்பட்ட வேலைகள் பல, இப்போது இரும்பினால் செய்யப்படுகின்றன.

சில பாத்திரங்களும் அச்செழுத்தும் ஈயத்தாற் செய்யப்படும். களிம்பு உண்டாகாதபடி, செப்புப் பாத்திரங்களுக்கும் பித்தளைப் பாத்திரங்களுக்கும் ஈயத்தை உருக்கிப் பூசுகிறார்கள். ஈயத்தைச் சாணத்தினால் வெள்ளையிடலாம்.

லோகங்கள் உண்டாகிற இடம் ஆகரம் எனப்படும்.

---

## ரு. மறுபிறப்பு.

நிச்சயம்-துணிவு. சுகம்-இன்பம்.
உண்ணல்-தின்னல். மரணம்-இறத்தல்.

காரியங்கள் எல்லாவற்றிற்கும் காரணங்கள் உண்டு. காரணம் இல்லாமற் காரியங்கள் உண்டாகிறது இல்லை. ஒருவனுக்குப் பசி மாறினால் அதற்குக் காரணம் அவன் முன்னே போசனம் பண்ணியது என்றும், ஒருவன் இறந்தால் அதற்குக் காரணம் அவன் முன்னே நஞ்சை உண்டது என்றும், நிச்சயித்து அறிகிறோமல்லவா. அதுபோல, நாம் இப்பிறப்பிலே அநுபவிக்கிற சுகத்துக்கும் துக்கத்துக்கும்

காரணமாக முன்னே புண்ணிய பாவங்கள் நம்மாற் செய்யப்பட்டிருத்தல் வேண்டும் என்பது நிச்சயமாகின்றது.

அந்தப் புண்ணிய பாவங்களை இந்தப் பிறப்பிலே தானே சிறுவயசில் செய்திருப்போம் என்றால், பிறக்கும்போது உண்டாகுந் துன்பத்துக்கும் அறிவில்லாத சிறு வயசில் அடைகிற துன்பத்துக்கும் காரணம் என்னை? ஒன்றும் இல்லையே. ஆதலினால், இந்தப் பிறவியை நாம் அடைய முன்னே, நன்மை தீமைகளை நாம் செய்திருக்கின்றோம் என்பது நிச்சயமாகின்றது.

இனி, ஒருவன் மரண காலத்திலே பெரிய புண்ணியத்தையேனும் பாவத்தையேனும் செய்தால் அவன், அவைகளை எப்போது அநுபவிப்பான்? மறுபிறப்பில் அல்லவா. ஆகவே மறுபிறப்பும் உண்டென்பது நிச்சயமாகின்றது.

---

## சு. சிதம்பரம்.

தலம்-இடம். நாமம்-பெயர்.
கனகம்-பொன். கூத்து-நடனம்.
நாயகர்-தலைவர். ஸ்நானஞ்செய்தல்-முழுகுதல்.

சிவஸ்தலங்களுக்குள்ளே சிதம்பரம் மகாவிசேடமுடையது. இங்கே கனகசபை என்று ஓரிடமுண்டு. இதிலே சிவபெருமான் எப்பொழுதும் பஞ்சகிருத்தியமாகிய திருக்கூத்தைச் செய்தருளுவர். பஞ்சகிருத்தியம் என்பது ஐந்து தொழில். அவை; படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்பனவாம்.

கனகசபையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுக்கு, நடேசர் என்றும், சபாநாயகர் என்றும், திருநாமம். சபாநாயகருக்குப் பக்கத்திலே சிவகாமியம்மையார் எழுந்தருளியிருக்கின்றார்.

முன்னொரு காலத்திலே, பதஞ்சலி வியாக்கிரபாதர் என்னும் இரண்டு முனிவர்கள் இங்கே செய்யப்படும் திருக்கூத்தைத் தரிசித்து அருள் பெற்றார்கள்.

கனகசபைக்கு வடக்குப் பக்கத்தில் சிவகங்கை என்று ஒரு தீர்த்தம் இருக்கின்றது. அதிலே இரணியவன்மன் என்னும் இராசா ஸ்நானஞ் செய்து, தனக்கு உண்டாயிருந்த நோய் மாறி உடம்பு பொன்மயமானான்.

---

## எ. பருவம்.

புட்பம்-பூ. வர்க்கம்-வகை.

இந்துக்கள், ஒரு வருஷத்தைக் கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என ஆறு பருவமாகப் பிரித்திருக்கிறார்கள். ஆவணியும், புரட்டாதியும் கார்; ஐப்பசியும் கார்த்திகையும் கூதிர்; மார்கழியும் தையும முன்பனி; மாசியும் பங்குனியும் பின்பனி; சித்திரையும் வைகாசியும் இளவேனில்; ஆனியும் ஆடியும் முதுவேனில்.

இங்கிலீசுகாரர், ஒருவருஷத்தை மூளைக்காலம், கோடைக்காலம், பழுக்காலம், மழைக்காலம், என நான்காகப் பிரிப்பார்.

யாழ்ப்பாணத்திலே, ஆவணி புரட்டாசி ஐப்பசி கார்த்திகை மார்கழி என்னும் மாசங்களிலே மழை பெய்கின்றது: மார்கழி தை மாசி பங்குனி மாசங்களிலே பனி பெய்கின்றது: சித்திரை முதல் ஐப்பசி வரையும் தென்றற் காற்றும், அப்பால் வாடைக்காற்றும் வீசும்; கோடைக் காற்றும் கொண்டற் காற்றும் இடையிலே வீசும்: வேனிற் காலத்தில் பலவகையான புட்பங்களும் கனிகளும், கார்த்திகை மார்கழி மாசங்களிலே [illegible] உண்டு. நெல்லைக் கார காலத்தில் விதைத்துப் பனிக் காலத்தில் அறுப்பார்கள்.

---

## அ. தமிழ்நாடு.

செழிப்பு-வளம். ஆலயம்-கோயில்.
சமுத்திரம்-கடல். விளைதல்-உண்டாதல்.

வடக்கே திருவேங்கடம் முதல் தெற்கே கன்னியாகுமரி வரையும் உள்ள நாடு தமிழ்நாடு என்று சொல்லப்படும். இத்தமிழ் நாட்டிலே முற்காலத்திலே சேரன் சோழன் பாண்டியனென்னு மூன்று அரசர்களிருந்து அரசு செய்தார்கள்.

காவேரியாறு பெருகுதலினாலே, சோழநாடு மிகவுஞ் செழிப்புடையது. சோழ நாட்டில் அனேக சிவாலயங்கள் இருக்கின்றன. நெல்லு விளைகிற நிலங்கள் இங்கே பல உள. மனுநீதிகண்ட சோழர் முதலானவர்கள் இங்கேயிருந்து அரசு செய்தவர்கள்.

பாண்டி நாட்டிலே தாமிரபர்ணி வைகை என இரண்டு நதிகள் பெருகுகின்றன. பாண்டிய ராசாக்

கள் காலத்திலே தலைச்சங்கம் இடைச்சங்கம் கடைச்சங்கம் என மூன்று சங்கங்கள் மதுரையில் இருந்தன. இந்தச் சங்கத்திலிருந்த புலவர்கள் தமிழில் அனேக நூல்கள் செய்திருக்கிறார்கள்.

மேலைச் சமுத்திரக் கரையில் உள்ள தேசம் சேரதேசம் எனப்படும். அது இப்பொழுது மலையாளம் என்று சொல்லப்படுகின்றது. அங்கே இப்பொழுது ஓரரசர் இருக்கிறார்.

---

## ௯. யுகதருமம்.

| | |
|---|---|
| வருணம்-சாதி. | அநியாயம்-நீதிதப்பினது. |
| ஆச்சிரமம்-நிலை. | உண்டி-உணவு. |
| ஆசாரம்-ஒழுக்கம். | கொள்ளையிடுதல்-பறித்தல். |

கிருத யுகம் திரேதா யுகம் துவாபர யுகம் கலி யுகம் என யுகங்கள் நாலு. தருமதேவதை கிருத யுகத்தில் நாலு கால் ஊன்றியும், திரேதா யுகத்தில் மூன்று கால் ஊன்றியும், துவாபர யுகத்தில் இரண்டு கால் ஊன்றியும், கலி யுகத்தில் ஒருகால் ஊன்றியும் நடக்கும்.

இப்பொழுது நடக்கிறது கலியுகம். இது பாவ யுகம் என்று சொல்லப்படும். இதில வருண ஆச்சிரம ஆசாரங்கள் இல்லை; இழிந்த குலத்திற் பிறந்தவரையினும் எவன் அதிக பொருளைக் கொடுக்கிறானோ, அவனே பெரியவன்; அநியாயமான வழியிலே வரினும், பொருளின்மேலேயே மனிதருடைய மனம் செல்லும்; பெண்கள் தங்கள் இஷ்டப்படி நடக்கத் தொ

டங்குவார்கள்; இவர்கள் குறைந்த வடிவமும் பெருத்த உண்டியும் உடையவர்களாயிப் பல பிள்ளைகளைப் பெறுவார்கள்; மனைவியர் பொருளில்லாத நாயகரை இகழ்ந்து தள்ளிவிட்டு, பொருளுடையவரைச் சேருவார்கள்; இராசாவானவன் தன் காவற்றொழிலைச் செய்யாது ஊரைக் கொள்ளையிடுவான். கலியுகத்தில் இன்பமே இல்லை.

---

## ௧0. பரதராசன்.

| | |
|---|---|
| நித்தியம்-எப்போதும். | பர்ணம்-இலை. |
| கருமம்-தொழில் | சுற்றம்-இனம். |
| பெடை-பெண். | பந்தம்-கட்டு. |
| தொனி-சத்தம். | பூருவசன்மம்-முற்பிறப்பு. |
| வேதனை-வருத்தம். | பற்று-ஆசை. |

பரதராசன் ஒருநாள் ஓராற்றிலே ஸ்நானஞ் செய்து நித்திய கருமம் முடிக்கும்போது, கருப்பமுடைய பெடை மான் ஒன்று அங்கே வந்து தண்ணீர் குடித்தது. பக்கத்திலே நின்று கர்ச்சித்த சிங்கத்தினுடைய தொனியைக் கேட்டு, அந்த மானானது திரும்பித் துள்ள, கருப்பத்தில் இருந்த கன்று வெளியே வந்து யாற்றிலே வீழ்ந்தது. ஈன்ற வேதனையால் தாய்மான் உடனே இறந்துபோயிற்று.

நீர்ப்பெருக்கில் அடிபட்டு வந்த மான் கன்றைப் பரதராசன் கண்டு எடுத்து, தன் பர்ண சாலைக்குக் கொண்டுபோய், வளர்த்தான். சுற்றப் பற்றை விட்டுத் தவஞ் செய்ய வந்த அரசனுக்கு இது ஒரு பெரிய சம்சார பந்தமாயிற்று. மான் கன்று, பிள்ளை

போல் வளர்ந்து, அரசன் இறக்கும்போது, பக்கத்தில் நின்று கண்ணீர் விட்டு அழுதது. அரசனுடைய மனசும் அப்பொழுது அதிலே பதிந்தது. அதனால், அவ்வரசன் பின்பு சப்புத்தியிலே பூருவ சன்ம அறிவோடு ஒரு மானகப் பிறந்தான்.

இறக்கும்போது ஒருவனுடைய உயிர் எதனைப் பாவித்ததோ, அதுவாயே பின் பிறக்கும்.

---

## கக. அறியவேண்டியவை.

| | |
|---|---|
| வீதி-தெரு. | பதார்த்தம்-பொருள். |
| விடை-மறுமொழி. | அன்னிய-வேறு. |

உன் பெயர் யாது? உன் தகப்பனுருடைய பெயர் யாது? உன் தகப்பனுருடைய உத்தியோகம் யாது? நீ இருக்கிறது எந்த ஊர்? எந்த வீதி? உன்னுடைய ஊரிலுள்ள அதிகாரிகள் யாவர்.

இந்தக் கேள்விகளுக்கு விடை சொல்ல ஒவ்வொரு பிள்ளையும் ஆயத்தமாய் இருத்தல் வேண்டும். சில பிள்ளைகள் தூரமான இடங்களுக்குப் போகும்போது, சில சமயத்தில், அழைத்துக்கொண்டு போனவர்களைத் தப்பவிட்டு வருந்துகிறார்கள். மேலே உள்ள கேள்விகளுக்கு விடை சொல்ல அறிந்திருந்தால், இலகுவில் வீடு வந்து சேரலாம்.

நீ இருக்கிற ஊரில் உண்டாக்கப் படுகின்ற பதார்த்தங்கள் யாவை? நீ இருக்கிற ஊருக்குப் பிற ஊர்களில் இருந்து வரவேண்டிய பதார்த்தங்கள் யாவை? நீ அன்னிய ஊருக்குப் போனால் அங்கே

இந்தக் கேள்விகளை உன்னிடங் கேட்பார்கள். ஆதலால் இவைகளுக்கும் மறுமொழி சொல்ல நீ ஆயத்தமாய் இருத்தல் வேண்டும்.

---

## ௧௨. கற்பு.

திருடல்-களவெடுத்தல். தகித்தல்—எரித்தல்.
அக்கினி-நெருப்பு. ஊனம்—குற்றம்.

இராவணன் சீதையைத் திருடிக்கொண்டுபோய்ச் சிலகாலம் தன்னுடைய பட்டணத்திலே சிறையில் வைத்தான். இராமர் அதனை அறிந்து இராவணனைக் கொன்று, அவளைச் சிறையினின்றும் மீட்டபோது, அவள் வந்து இராமரை வணங்கி நின்றாள். இராமர், "நீ இராக்கதருடைய வசத்தில் இருந்தமையால் உன் கற்புப் பழுதாயிற்று. உன்னை நான் நம்பமாட்டேன்" என்று சொல்லி அவளை விலக்கினார். உடனே சீதை மனம் வருந்தி, அக்கினி வளர்த்து, "என் கற்புப் பழுதுபட்டு இருக்குமாயின், அக்கினியே! என்னைத் தகிப்பாயாக" என்று சொல்லிக்கொண்டு, அதிலே விழுந்தாள். அக்கினிதேவன் அவளுக்கு யாதும ஊனம வராமற் காத்தனன். இராமர் அது கண்டு மகிழ்ச்சி அடைந்து, பின் அவளை மனைவியாகச் சேர்த்துக் கொண்டனர். கற்புடைய பெண்களுக்கு அரியது ஒன்றும் இல்லை. அவர்களுக்குத் தெய்வம கூடநின்று உதவி செய்யும்.

---

## ௧௩. மார்க்கம்.

நிர்-இன்மை. நூல்-சாத்திரம்.
ஈசுரன்-கடவுள். ஏகம்-ஒன்று.

மார்க்கம் என்பது வழி. உலகத்தவர்கள் கடவுளை அடையலாம் என்று நடக்கிற வழி மார்க்கம் என்று சொல்லப்படும்.

இப்போது இந்த உலகத்திலே விசேஷமாக நாலு மார்க்கங்கள் இருக்கின்றன. அவையாவன வைதிக மார்க்கம், பௌத்த மார்க்கம், இசிலா மார்க்கம், கிறிஸ்து மார்க்கம் என்பன.

வைதிக மார்க்கத்தவர்களுடைய நூல் வேதாகமம்; பௌத்த மார்க்கத்தவர்களுடையது பிடகம்; இசிலா மார்க்கத்தவர் களுடையது கோரான்; கிறிஸ்து மார்க்கத்தவர்களுடையது விவிலிய நூல்.

இந்த நாலு மார்க்கங்கள் அல்லாமல், நிரீச்சுர வாதம், ஏகேச்சுர வாதம் முதலாக அநேக மதங்களும் உண்டு.

இந்தக் காலத்திலே பௌத்த மார்க்கத்தை அநுட்டிக்கிறவர்களே பெருந் தொகையினர்.

இந்தியர்களுடைய வேத நூல்களைப் பார்த்து ஐரோப்பியர்கள் எல்லாரும், அவ்வேதங்கள் உலகத்திலுள்ள மற்றை நூல்களுக்கு எல்லாம் முந்தினவை என்று எழுதியிருக்கிறார்கள்.

---

## கச. இன்சொல்.

வன்சொல்-கடுஞ்சொல். பிரீதி-மகிழ்ச்சி.

ஒருவனிடத்திலே மற்றவருக்குப் பிரீதியை உண்டாக்குவது அவனுடைய இன்சொல்லாம். குயி

யினிடத்தே விருப்பும், கழுதையினிடத்தே வெறுப்பும், நமக்கு எதினால் உண்டாகின்றன? அவைகளினுடைய சத்தத்தினால் அல்லவா? அதுபோல, இன்சொல்லைச் சொல்லுகிறவனிடத்திலே விருப்பும், வன்சொல்லைச் சொல்லுகிறவனிடத்திலே வெறுப்பும், அவர்களுடைய சொற்களால் உண்டாகின்றன.

வன்சொற்களை நீக்கி இன்சொற்களையே சொல்லுகிறது அருமையான காரியம் அன்று; எவரும் செய்யலாம். செல்வம் உடையவன் சிநேகஞ் செய்ய வேண்டினால், பொருள் கொடுத்துச் செய்யவேண்டும். இன்சொற்களைச் சொல்லுகிறவனுக்கு அவனுடைய முகத்தைக் கண்டவுடனே எவருந் தாமே வந்து சிநேகிதராவர்.

வலிய கல் நெஞ்சு உடையவரும் இன்சொல்லைக் கேட்டவுடனே இளகிவிடுவர். வலிய இருப்புப் பாரைக்கும் இளகாத கற்பாறையானது மரத்தினுடைய பசிய வேருக்கு இளகி இடங் கொடுக்க வில்லையா.

இன்சொற் சொல்லுகிறவர், தாம் வேண்டிய காரியங்களை எளிதில் முடிப்பார். அவருக்கு ஒருபோதும் துன்பம் இல்லை.

---

## கரு. எழுத்துப் புணர்ச்சி.

அ என்பது முதல் ஔ என்பது முடிவாயுள்ள பன்னிரண்டெழுத்தும் உயிரெழுத்து என்று சொல்லப்படும். க் என்பது முதல் ன் என்பது முடிவாயுள்ள பதினெட்டு எழுத்தும் மெய்யெழுத்து என்று சொல்லப்படும்.

ஒரு சொல்லின் முடிவிலே ஏதேனும் மெய்யெழுத்து நிற்க, அடுத்த சொல்லு உயிரெழுத்தை முதலாக உடையதாய் வந்தால், இந்த உயிரெழுத்து அந்த மெய்யெழுத்தின்மேல் ஏறும். செல்வன் அடியிணை என்பது செல்வனடியிணை என வரும். உயிர் எழுத்து என்பது உயிரெழுத்து என வரும்.

சொல்லின் முடிவிலே நிற்கிற ம் என்னும் எழுத்து, சில இடத்திலே ங் என்றும், ஞ் என்றும், ந் என்றும் வரும். புறம் கை என்பது புறங்கை என்றும், அறம் செய என்பது அறஞ்செய என்றும் பழம் தந்தான் என்பது பழந்தந்தானென்றும் வரும்.

சொல்லின் முடிவிலே நிற்கிற ல் என்பது சில இடத்திலே ற் என்று வரும். நிலையில் பிரியேல் என்பது நிலையிற் பிரியேல் என வரும். ள் என்பது ட் என்று வரும். கோள் செவி என்பது கோட்செவி என வரும்.

---

## ௧௬. களவு.

இருடிகள்-முனிவர்கள்.
ஆச்சிரமம்-முனிவர்கள் இருக்குமிடம்.
சகோதரன்-ஒருவயிற்றிற் பிறந்தவன்.
மகர்ஷி-பெரிய முனிவர்.
சம்மதி-உடன்பாடு.
அநுமதி-உத்தரவு.
கனி-பழம்.
மன்னிக்கிறது-பொறுக்கிறது.

முற்காலத்திலே சங்கர் இலிகிதர் என, இரண்டு சகோதர இருடிகள் இருந்தார்கள். ஒருநாள் இலிகி

தரென்பவர், சங்கருடைய ஆச்சிரமத்துக்கு வந்து "சகோதரன் இல்லாத நேரத்தில், அங்குள்ள கனிக ளைப் பறித்துத் தின்றார். அந்தச் சமயத்தில் அங்கே வந்த சங்கர், அதைக் கண்டு கோபித்து," நீ திருடு ஞய் ஆதலால் அரசனிடத்திற் போய் "என்னுடை யது அல்லாததை என்னுடையது ஆக்கினேன். அந் தக் களவுக் குற்றத்துக்காக என்னைத் தண்டியும்" என்று சொல்லு" என்றார்.

உடனே இலிகிதர் அரசனிடத்திற் போக, அர சன் எதிர்கொண்டு வந்து "மகர்ஷியே! இங்கு வந்த காரணம் என்ன" என்றான். இலிகிதர் "அரசனே" வந்த காரணத்தை நீ முடிப்பாயானல் அதனைச் சொல்லுவேன்" என்று சொல்லி, அரசனுடைய சம் மதியைக் கேட்டுக்கொண்டு, "என் சகோதரனுடைய அநுமதியின்றி அவருடைய கனிகளைப் பறித்துத் தின்றேன், அந்தக் களவுக்காக என்னைத் தாமத மின்றித் தண்டிப்பாயாக" என்றார். அரசன் "தண் டிக்கிறதற்கு எனக்கு அதிகாரம் இருக்கிறதுபோல மன்னிக்கிறதற்கும் அதிகாரம் உண்டு. உம்முடைய குற்றம் மன்னிக்கப்பட்டது" என்றான்.

---

## ௧௭. மாணுக்கர்.

மாணுக்கர்-படிக்கிறவர். உள்ளம்-மனம்.

மாணுக்கர்கள் மூன்று வகைப்படுவர். முதல் மாணுக்கர் பசுவைப் போல்வார். இடை மாணுக்கர் கிளியைப் போல்வார். கடை மாணுக்கர் ஓட்டைக் குடத்தைப் போல்வார்.

பசுவானது, அதிக புல்லைக் கண்டால் வயி
நிறைய மேய்ந்து பின் ஓரிடத்திற் போயிருந்து அ
தைச் சிறிது சிறிதாக வருவித்து மென்று தின்னு
அதுபோல முதல் மாணாக்கர் அதிக கல்வியுடை
வரைக் கண்டால், அதனைத் தம்முடைய உள்ள
நிறையக் கேட்டு, பின் ஓரிடத்திற் போயிருந்
சிறிது சிறிதாக நினைவிற் கொண்டுவருவார்.

கிளியானது, தனக்குக் கற்பித்ததைச் சொல்லு
வதன்றி, வேறொன்றையுஞ் சொல்லாது. அதுபோல
இடைமாணாக்கர், தமக்கு உபாத்தியாயர் கற்பி
த்ததையன்றி, வேறொன்றையுஞ் சொல்ல மாட்டார்.

ஓட்டைக் குடத்தில் நீரை விடவிட ஒழுகி
போம். அதுபோல, கடைமாணாக்கர் நூலைக் க
ற்பிக்கக் கற்பிக்க மறந்துவிடுவர்.

இன்னும், முதல் மாணாக்கருக்கு அன்னத்தை
யும், இடை மாணாக்கருக்கு மண்ணையும், கடை
மாணாக்கருக்கு ஆட்டையும் எருமையையும் பன்னா
டையையும், உவமையாகச் சொல்லுவார்கள்.

---

## கஅ. பொருள்.

சம்பாதித்தல்-தேடல்.
தீண்டல்-தொடுதல்.
சேவித்தல்-தொண்டு செய்தல்.
யாசித்தல்-இரத்தல்.
சேமித்தல்-காப்பாற்றுதல்.

இந்த உலக இன்பத்தை நாம் விரும்பினால்
பொருளைச் சம்பாதிக்க வேண்டும். பொருளுடைய

வருக்கு இவ்வுலகத்தில் எல்லாரும் உறவினராவர். அவருடைய வார்த்தை எங்குஞ் செல்லும்.

தான் வருந்தித் தேடிய பொருளே உத்தமமானது. பிதா வழியாற் கிடைத்தது மத்திமமாகும்; சகோதரால் தேடித் தந்த பொருள் அதமமாகும். மனைவி கொண்டுவந்த சீதனப் பொருள் தீண்டவுந் தக்கது அன்று.

தன் குலத்துக்கு உரிய தொழில் செய்து பொருள் தேடுதலே உத்தமமான வழி. பயிர் செய்தலும் வியாபாரஞ் செய்தலும் மத்திமமானவை. ஒருவரைச் சேவித்துப் பிழைத்தல் அதமமானது. யாசித்தும் களவெடுத்தும் ஒருபோதும் பொருள் தேடலாகாது.

செல்வம் நிலையில்லாதது. ஆதலால் அதனை உடையவர், தாம் உண்டும் உடுத்தும் தருமங்கள் செய்தும், அதனை அநுபவிக்கவேண்டும். அநேகர், திரவியத்தைப் பாடுபட்டுத் தேடியும் அதனை அநுபவியாமல், சேமித்து வைத்துவிட்டு, இறந்துபோகிறார்கள். அப்படி அநுபவியாத பொருளினால் என்ன பயன்!

---

## ௧௯. விக்கிரக ஆராதனை.

ஆராதனை-வழிபாடு.
பிரார்த்தித்தல்-வேண்டிக்கொள்ளுதல்.
ஆவாகனம்-கொண்டுவருதல்.
சாந்நித்தியம்-சமீபத்தில் ஆதல்.
அரூபி-உருவம் இல்லாதவர்.

விக்கிரக ஆராதனை முற்காலத்தில் இருந்த எல்லாச் சாதியாராலும் செய்யப்பட்டு வந்தது. இந்தியர்கள் எகிப்தியர் கிரேக்கர் யூதர் முதலானவர்கள் எல்லாரும் விக்கிரக ஆராதனை செய்கிறவர்கள்.

சிலர், இந்தியர்கள் கல்லையுஞ் செம்பையும் வணங்குகிறார்கள் என்று பரிகாசஞ் செய்கிறார்கள். அவர்கள் உண்மையாய்க் கல்லையுஞ் செம்பையும் வணங்கவில்லை. எங்கும் நிறைந்திருக்கிற கடவுளை, கல்லினாலும் செம்பு முதலியவைகளினாலும் செய்யப்பட்ட திருவுருவங்களிலே, ஆவாகனம் முதலானவைகள் செய்து, சாந்நித்தியராய் இருக்கும்படி பிரார்த்தித்து அவற்றில் வணங்குகிறார்கள். அரூபியாய் எங்கும் நிறைந்திருக்கிற கடவுளை, நாம் வணங்கி, உய்யும் பொருட்டு, இவ்வடிவத்திலே இருந்து நாம் செய்யும் வழிபாட்டை ஏற்று அருள் செய்யும் என்று பிரார்த்தித்தால், அவர் அது செய்யமாட்டாரா.

பசுவுக்குப் பாலானது சரீரம் முழுதும் கலந்து இருந்தாலும், முலை வழியாகச் சுரத்தல்போல, கடவுளும் எங்கும் கலந்திருந்தாலும், ஆவாகனம் முதலியவை செய்யப்பட்ட விக்கிரக வழியாக நமக்கு அருள் செய்கிறார்.

---

## உ0. ஆசாரம்.

பலகணி-சாளரம். ஆசௌசம்-சுத்த
வாரம்-ஏழுநாள்கொண்ட காலம். மின்மை.

வீட்டை நாடோறும் பெருக்கி, கழுவ வேண்டிய இடங்களைக் கழுவிச் சுத்தி செய்தல் வேண்டும்.

வெளியே உள்ள சுத்தமான காற்று உள்ளே வரவும், உள்ளே உள்ள அசுத்தமான காற்று வெளியே போகவுந் தக்கதாக, பலகணிகளையும் கதவுகளையும் திரைகளையும் திறந்துவிடுதல் வேண்டும்.

வாரத்துக்கு ஒருதரமேனும் கிணற்றில் உள்ள நீரை இறைத்து, அதனைச் சுத்திசெய்தல் வேண்டும். வீட்டுக்குச் சமீபத்திலே குப்பைகளைப் போடலாகாது; மலமூத்திர எச்சில்களைக் கழிக்கலாகாது. பசுவின் சாணம் சுத்தமும் குளிர்மையும உடைமையால், அதனால் வீட்டை மெழுகுவது நல்லது. வீட்டுக்குச் சமீபத்திலே புட்பச் செடிகளை வைத்தால் அவை நல்ல மணத்தைக் கொடுக்கும்.

நாடோறும் சரீரத்தில் உள்ள அழுக்கைத் தேய்த்து ஸ்நானஞ் செய்தல் வேண்டும். ஈர வஸ்திரங்களையும் அழுக்கு வஸ்திரங்களையும் ஒருபோதும் உடுக்கலாகாது. தீண்டத் தகாதவரையும் அசௌசம் உடையவரையும் தீண்டலாகாது.

அழுகின பதார்த்தங்கள் புசிக்கத் தக்கனவல்ல.

---

## உக. ஆலய சேவை.

சிந்தித்தல்-நினைத்தல். அலங்கரித்தல்-சிறப்பித்தல்.

ஆலயமாவது எங்கும் நிறைந்த கடவுள் நாம் செய்யும் வழிபாட்டை ஏற்கும் பொருட்டு வெளிப்பட்டவராய் எழுந்தருளி யிருக்கும் இடமாம். நாம் கடவுளை வழிபாடு செய்யும்போது, நம்முடைய மனம் அவரிடத்திலேயன்றி, வேறொன்றிலும் செல்

லக் கூடாது. ஆதலால் மனதைச் சிற்றின்ப வழி களிலே இழுக்கக் கூடியவைகள் ஒன்றும் ஆலயத்தி தில் ஆகாது.

ஆலயத்துக்குப் போகும்போதும், அங்கே வழி பாடு செய்யும் போதும், திரும்பி வீட்டுக்கு வரும் போதும், கோபம் காமம் முதலிய பாவங்களை விலக்கி, கடவுளுடைய அருட் குணங்களையே சிந் தித்தல் வேண்டும். ஆலயத்துக்குப் போம்போது, தங்களை ஆபரணங்களினாலும் வஸ்திரங்களினாலும் அலங்கரித்துக் கொள்ளல் ஆகாது. நம்முடைய அற்பமாகிய ஆபரணத்தையும் வஸ்திரத்தையும் கண்டு மனிதர் மயங்குவாரன்றி, கடவுளும் மயங்கு வாரா? இல்லை இல்லை. பின் கடவுள் எதைக் கண்டு மயங்குவார்? நம்முடைய அன்பைக் கண்டு மயங்கு வார். ஆதலால், அவரிடத்தே அன்பை வருவிக்கத் தக்க ஆபரணங்களாலும் வஸ்திரங்களாலுமே, அவரை நாம் வணங்கப் போம்போது, நம்மை அலங் கரிக்க வேண்டும்.

நம்மேல் அன்புடையராய், எப்பொழுதும் நம் மைக் காவல் செய்துகொண்டிருக்கிற கடவுளை, நாம் ஒருநாளில் ஒருதரமாயினும் ஆலயத்திலே போய் வழிபட வேண்டாமா.

---

## உஉ. கங்கை.

| | |
|---|---|
| கலத்தல்-சேருதல். | யாத்திரை-போதல். |
| தீர்த்தம்-சலம். | கிருமிகள்-புழுக்கள். |

கங்கை, யமுனை, சரசுவதி, நருமதை, சிந்து, காவேரி, கோதாவரி, சோணநதி, துங்கபத்திரை

என ஒன்பது விசேஷமான தீர்த்தங்கள் இந்தியாவில் இருக்கின்றன. அவைகளுள்ளே கங்கையாறு, இமையமலையிலே தோன்றிக் கற்கத்தாவுக்குச் சமீபத்திலே கடலோடு கலக்கின்றது. இதனுடைய நீளம் ஆயிரத்து ஐஞ்ஞூறு மைல். காசியிலே கங்கை விசேஷமுடையது. கங்கை மிகவும் ஆழமுடையது. கங்கையில் நீர் ஒருகாலத்தும் வற்றுகிறதில்லை. பிரயாகை என்னும் இடத்திலே கங்கையாற்றோடு யமுனையாறு சேருகின்றது.

கங்கை மகா விசேஷமுடையது என்று அநேகர் காசிக்குத் தீர்த்த யாத்திரை செய்கிறார்கள். அநேகர், அதன் தீர்த்தத்தைக் காவடி கட்டிக் கொண்டு போய், கோயில்களில் அபிஷேகஞ் செய்விக்கிறார்கள். எத்தனை நாளைக்கு வைத்தாலும், மற்றைய தீர்த்தங்களிற் போல, கங்கா சலத்தில் கிருமிகள் உண்டாகிறது இல்லை.

இந்தத் தேசத்திலிருந்து போய்க் கங்கா ஸ்நானஞ் செய்பவர் முன்னே மிக அரியர். புகைவண்டிப்பாதை திறக்கப்பட்டபின் அநேகர் போய் ஸ்நானஞ் செய்து வருகிறார்கள்.

---

## உங. இராமர்.

| | |
|---|---|
| நகரம்-பட்டணம். | துயர்-துன்பம், |
| நோக்கி-பார்த்து. | இரக்ஷித்தல்-காத்தல். |
| அரக்கன்-இராக்கதன். | அபயம்-பயமின்மை. |

அயோத்தி நகரத்தில் இருந்த தசரதருடைய புதல்வராகிய இராமர், தம்முடைய சிறிய தாயாகிய

கைகேசியுடைய சூழ்ச்சியினாலே, தாம் ஏறவேண்டிய சிங்காசனத்தில் தம்முடைய தம்பியாகிய பரதனை ஏறவைத்துவிட்டு, தாம் காட்டுக்குப் போனார். அங்கே முனிவர்கள் எல்லாருங் கூடி இராமரை நோக்கி "இராசாவே! நாங்கள் இராவணனாகிய கொடிய அரக்கனாலே படுந் துயர் சிறிதன்று. அவனாலே நம்முடைய வேத ஒழுக்கங்களையெல்லாம்நீக்கியிருக்கின்றோம். நாங்கள் உனக்கு அடைக்கலம்" என்றார்கள். இராமர் அவர்களைப் பார்த்து: "முனிவர்களே! பயப்படாதிருங்கள். இராவணனைக் கொன்று உங்களை இரக்ஷிப்பேன்" என்று அபயங் கொடுத்து, சில காலம் அங்கே இருந்தார்.

இருக்கும்போது இராவணன், தன் மாமனாகிய மாரீசனைப் பொன்மானாய் இராமர் இருக்கிற இடத்திற் போய் உலாவும்படி செய்தான். சீதை அந்த மானினுடைய அழகைக் கண்டு மயங்கி, அதனைப் பிடித்துத் தரும்படி இராமரை வேண்ட, அவரும் அதன் பிறகே போனார். அந்தச் சமயத்தில் இராவணன் சீதையைக் கொண்டுபோய்விட்டான். பின்பு இராமர் இராவணனுடைய ஊருக்குப் போய், அவனைக் கொன்று சீதையை மீட்டு, முனிவர்களுக்குக் கொடுத்த வாக்கை நிறைவேற்றினார்.

---

## உ௪. தேவர்கள்.

ஏவல்-கட்டளை. குரு-ஆசாரியர்.

தரு-விருக்ஷம், மரம். பதுமம்-தாமரை.

பிரமா விட்டுணு உருத்திரன் என்று மூன்று மூர்த்திகள் இருக்கிறார்கள். உலகத்தைப் படைக்கிற

தொழிலைச் செய்கிறவர் பிரமா; காக்கிற தொழிலைச் செய்கிறவர் விட்டுணு; அழிக்கிற தொழிலைச் செய்கிறவர் உருத்திரன். இந்த மூன்று மூர்த்திகளும் இந்த மூன்று தொழிலையும் தங்களுக்கெல்லாம் மேலாகிய கடவுளினுடைய ஏவலினாலே செய்கிறார்கள்.

இவர்களுக்குக் கீழே முப்பத்து மூன்று கோடி தேவர்கள் இருக்கிறார்கள். தேவர்களுக்கெல்லாம் குருவாயுள்ளவர் வியாழன். இந்திரன் தேவர்களுக்கெல்லாம் இராசா என்று சொல்லப்படுவான். இந்திரனுடைய மனைவிக்குப் பெயர் இந்திராணி; மகனுக்குப் பெயர் சயந்தன். இந்திரனுடைய உலகம் பொன்னுலகம் எனப்படும். நினைத்தவைகளைக் கொடுக்கிற கற்பகதரு, காமதேனு, சங்கநிதி, பதுமநிதி முதலானவைகள் பொன்னுலகத்திலே உள்ளன. புண்ணியங்களைச் செய்தவர்களே தேவர்களாய்ப் பிறப்பார்கள்.

இந்தத் தேவர்கள் எல்லாரும் ஒருகாலத்திலே அழிந்துபோவார்கள். பரமபதியாகிய கடவுள் ஒருவரே அழிவு இல்லாதவர்.

---

## உரு. நரியினுடைய புத்தி.

| | |
|---|---|
| முழை-குகை. | மிருகம்-விலங்கு, |
| மூப்பு-முதுமை. | க்ஷேமம்-காவல். |
| இரை-உணவு. | சுவடு-அடையாளம். |

காட்டில் உள்ள மிருகங்கள் எல்லாவற்றிற்கும் இராசாவாகிய சிங்கம், ஒரு மலை முழையினுள்ளே வாசஞ் செய்துகொண்டிருந்தது. அது மூப்பு வந்த

போது, வெளியே போய் இரைகளைத் தேட இயலாததாய், பசியினால் வருந்திற்று. இப்படி வருந்துங் காலத்தில் அது தனக்குள்ளே ஒரு யுக்தி செய்து கொண்டு, முழையின் வாயிலிலே வெளியே வந்து நோயாளிபோலப் படுத்துக்கொண்டது. மற்றைய மிருகங்களெல்லாம் இராசாவுக்கு நோயென்று கேள்விப்பட்டு அதனைக் காண ஒவ்வொன்றாக வந்தன. சிங்கமானது அவைகளை யெல்லாம் இனியவார்த்தை சொல்லி அழைத்துக்கொண்டு முழைக்கு உள்ளே போய், கொன்று தின்று பசி தீர்ந்து வந்தது.

இப்படி யிருக்குங் காலத்தில் ஒருநாள் நரியும் சிங்கத்தைக் காண அங்கே வந்து, அதை வணங்கி "மகா ராசாவே! தங்களுடைய க்ஷேமம் எப்படி?" என்று கேட்டது. சிங்கம் "தோழா! எனக்குச் சரீர பெலம கெட்டுப் போயிற்று; பற்களெல்லாம் கழன்று விட்டன; போசனத்தில் விருப்பம இல்லை. அது கிடக்க, உன்னிடத்திற் கதை கேட்க மிகவும் ஆசைப் படுகின்றேன்; உள்ளே வருவாயாக" என்று அழைத்தது. நரி: "ஐயா! உள்ளே வந்த அநேக மிருகங்களுடைய அடிச் சுவடுகளை இங்கே காண்கின்றேனே; வெளியே வந்த சுவடு ஒன்றையுங் காணேனே. இது என்ன" என்று சொல்லி ஓடிப்போய் விட்டது.

---

## உ௬. அளவை.

எண்ணலளவை என்றும், எடுத்தலளவை என்றும், முகத்தலளவை என்றும், நீட்டலளவை என்றும் அளவை நான்கு வகைப்படும். எடுத்தலாவது

ஆக்குதல். முகத்தலாவது மொள்ளுதல். நீட்டலாவது சார்த்துதல்.

ஒன்று, இரண்டு, மூன்று, அரை, கால் என்பன எண்ணலளவைப் பெயர்கள்.

கழஞ்சு, பலம் என்பன எடுத்தலளவைப் பெயர்கள்.

நாழி, உரி, உழக்கு, ஆழாக்கு என்பன முகத்தலளவைப் பெயர்கள்.

அங்குலம், முழம், குரோசம், யோசனை என்பன நீட்டலளவைப் பெயர்கள்.

கலை, விகலை, நாழிகை என்பன காலவளவைப் பெயர்கள்.

அவுன்சு, பவுண்டு, டன் என்பன இங்கிலீசு எடுத்தலளவைப் பெயர்கள்.

அடி, யார், மைல் என்பன இங்கிலீசு நீட்டலளவைப் பெயர்கள்.

செக்கண்டு, மினிற்று, மணி என்பன இங்கிலீசுக் காலவளவைப் பெயர்கள்.

---

## உஎ. தொழில் செய்யுமுறை.

சுபாவம்-தன்னியல்பு. சீக்கிரம்-விரைவு.

ஏதொரு தொழிலையும் படபடப்பு இல்லாமலும் அவதானத்தோடு செய்யக் கடவாய்.

நீயே இலகுவாகச் செய்யக் கூடிய வேலையைப் பிறரைக்கொண்டு செய்வியாதே.

ஒவ்வொரு பொருளையும் அது அது இருக்கும் இடத்திலே வை.

மறதி மனிதருக்குச் சுபாவம். ஆதலால், முக்கியமான விஷயங்களை எழுதிக்கொள்ளுதல் வேண்டும்.

நீ பிறருக்கு எழுதுங் கடிதங்களுக்குப் பிரதிரூபம் வைத்துக்கொள்.

அவ்வன்றைக்குச் செய்யவேண்டிய வேலையை அன்றன்றைக்கே செய்தல் வேண்டும். நாளைக்கு என்று வையாதே.

வீட்டில் ஒருவரே முதல்வராயிருக்க, மற்றவர்கள் அவர் சொற் கேட்டு நடத்தல் வேண்டும். எல்லாரும் முதன்மை செலுத்துகிற காரியங்கள் சீக்கிரம் பழுது பட்டுப்போம்.

---

## உஅ. அச்சுயந்திரம்.

### பிழை—தவறு.

அச்சுயந்திரம் இந்தத் தேசத்துக்கு வருவதற்கு முன்னே நூல்கள் எல்லாம் ஓலைப் புத்தகங்களில் எழுதப்பட்டு வந்தன. புத்தகம் எழுதுகிறவர்கள் ஒன்றுபோல மற்றதை எழுதுகிறது மிகவும் அருமை. ஆதலினாலே, எழுதுகிற புத்தகங்களிற் பல பிழைகள் உண்டாகின்றன. அச்சிலே பதிக்கிறதினாலே, ஒரு நூல் எல்லாப் பிரதிகளிலும் ஒரே மாதிரியாயிருக்கும்.

ஒரு நூலின் ஒரு பிரதியைக் கையினால் எழுதுகிற காலத்துக்குள்ளே, அதுபோலப் பல ஆயிரம் பிரதிகளை, அச்சிற் பதிப்பிக்கலாம். அதனாலே புத்தகத்துக்கு விலையும் மிகக் குறைகின்றது. முன்னே

ஒரு கந்தபுராணம் எழுதுவதற்கு நாற்பது ஐம்பது ரூபா கொடுக்கவேண்டும். அச்சுப் புத்தகம் இப்போது ஐந்து ரூபாவுக்கு வாங்கலாம்.

அச்செழுத்துக்கள் ஓரே உயரமுடையனவாயும், மேற்புறத்தில் அந்த அந்த எழுத்து இடமாகச் செய்யப்பட்டும் இருக்கும். அ என்றது அச்சில் ஙு என்றிருக்கும். இந்த எழுத்துக்களை இடப்புறமாக அடுக்கி இறுக்கிக்கொண்டு, ஓரே மட்டமான இருப்புத் தகட்டில் வைதது, மசி பூசி, அதன்மேல் காகிதத்தை வைத்து, வேறொரு மட்டமான தகட்டால் அழுத்தினால், நாம் இப்போது வாசிக்கும் இப் புத்தகத்தின் பக்கம்போல வரும்.

அச்சிடுகிற வழியைச் சீனதேசத்தில் உள்ளவர்களே முதற் கண்டவர்கள் என்கிறார்கள். ஐரோப்பியர் நானூற்று அறுபது வருஷங்களுக்கு முன்னே தான் இதனை அறிந்தார்கள்.

---

## உ கூ. மரணம்.

| | |
|---|---|
| நிச்சயம்-துணிபு | இச்சித்தல்-விரும்புதல். |
| தீங்கு-பொல்லாங்கு. | தொழில்-செயல். |

நாம் இறக்கப்போகிறது நிச்சயம், பிறந்தவர்களுள்ளே இறவாமல் தப்பினவர்கள் ஒருவருமிலர். நாம் எப்போது இறப்போமென்பது நமக்குத் தெரியாது. ஆதலினால் நாம் எப்பொழுதும் மரணத்துக்கு ஆயத்தமாயிருத்தல் வேண்டும்.

நாளைக்கு என்று ஒரு வேலையையும் வைத்தல் ஆகாது. ஒருவருக்கும் தீங்கு நினைக்கலாகாது.

பொய் சொல்லக் கூடாது. பிறருடைய பொருளைக் களவாடலாகாது. அதனை இச்சிக்கிறதும் ஆகாது. பிறருடைய கல்வி செல்வங்களைக் கண்டு பொறாமைப் படலாகாது. பிறருக்கு வருத்தம் தரத் தக்கது ஒன் றையுஞ் செய்யலாகாது. தனக்கேனும் பிறருக்கே னும் நன்மையைத் தருந் தொழில்களையே செய்தல் வேண்டும். வீண் பொழுது போக்கலாகாது. யமன் நம்மைக் கொல்ல வரும்போது மிகப் பயங்கரமான உருவத்தோடும் வருவான். அவனை விலக்க நம்மு டைய தாய் தகப்பன் ஒருவராலும் இயலாது. பாவங் களை விலக்கிப் புண்ணியங்களைச் செய்கிறவர்களே அவனைக் கண்டு பயப்படாதவர்கள்.

மேலே சொல்லப்பட்டவைகளைச் செய்து வரு கிறவர்களே நாம் எப்பொழுதும் மரணத்துக்கு ஆயத்தமாயிருத்தல் வேண்டும்.

---

## ௩0, ௩௧. ஆரோக்கியம்.

ஆரோக்கியம் என்பது நோய் இல்லாமை. சரீ ரத்தில் நோய் உண்டாகாதபடி நாம் இயன்ற அளவு நடந்து கொள்ளுதல் வேண்டும். நோய் உண் டானால், நாம் ஒரு வேலையுஞ் செய்துகொள்ள மாட் டோம்; படுக்கையிலேயே கிடக்கவேண்டும். நம்மு டைய காரியங்களை எல்லாம் பிறர் செய்து தரல் வேண்டும்.

நோய் உண்டாகாதபடி காத்துக்கொள்ள வேண்டுமானால்,

௧. சுத்தமான காற்று உள்ள இடத்திலே இருத் தல் வேண்டும்.

௨. சுத்தமான தண்ணீரையே குடித்தல் வேண்டும்.

௩. சுத்தமான தண்ணீரிலேயே ஸ்நானஞ் செய்தல் வேண்டும்.

௪. நல்ல சாப்பாடுகளையே சாப்பிடுதல் வேண்டும். அழுகினது, புழுத்தது, இலகுவில் சீரணமாகாதது, சாரமில்லாதது இவை முதலான பொருள்களைச் சாப்பிடுதல் கூடாது.

௫. அசுத்தமான பொருள்களைத் தொடவுங் கூடாது. தொட்டால் உடனே தன்னைச் சுத்தி செய்துகொள்ளுதல் வேண்டும்.

௬. பேதி கயம் முதலிய தொற்றுநோய் உடையவர்களோடு சகவாசம் பண்ணக் கூடாது.

௭. மலம் மூத்திரம் எச்சில் கோழை முதலியவைகளை மிதிக்கக் கூடாது.

௮. நெடுநேரம் இரவில் நித்திரை இல்லாமல் இருக்கக் கூடாது.

௯. மல சலங்களை அடக்கக் கூடாது.

௧0. இரவிலே நெடுநேரஞ் சென்றபின் தெரு வழியே திரியக் கூடாது.

௧௧. ஒவ்வொரு நாளும், வியர்வை உண்டாக வேலை செய்தல் வேண்டும்.

இவை முதலானவைகளை அநுட்டித்து வந்தால், இயன்ற அளவு நாம் ஆரோக்கியம் உடையவர்களாய் இருக்கலாம்.

---

## ௩௨. இங்கிலிசுப் பாஷை.

இங்கிலாந்து என்னும் தேசத்தில் உள்ளவர்கள் பேசுகிற பாஷை இங்கிலிசுப் பாஷை. இது இங்கி

லாந்தில் உள்ளவர்களுடைய பாஷையானாலும், இக்காலத்தில் எல்லாத் தேசத்தாராலும் பேசப்படுகின்றது. வியாபார விஷயத்தில் எல்லாரும் இப்பாஷையையே வழங்குகிறார்கள். ஆகையால் இது வியாபாரப் பாஷை என்றும் பெயர் பெறும்.

இங்கிலிஷில் உள்ள எழுத்துக்கள் ஆக இருபத்தாறு. இதிலுள்ள சொற்கள் ஏறக்குறைய எல்லாம் பிறபாஷைகளினின்று வந்தவைகளாம். சில தமிழ்ச் சொற்களும் இங்கிலிசுச் சொற்கள் போலாகி இப்போது வழங்குகின்றன.

இங்கிலிசு படித்தவர்களுக்கே, இக்காலத்தில் மரியாதை; அவர்களுக்கே பெரும் உத்தியோகம்; அவர்களுக்கே பணம். ஆகலால் வறியவர்கள் தாமும் அப்பாஷையையே விரும்பி, பெருஞ் செலவு செய்தும் படிக்கிறார்கள்.

---

## ௩௩. அருந்ததிக் கற்பு.

பெண்களுக்குச் சிறந்த ஆபரணம் கற்பு. கற்புடைய பெண்களுக்கு அருந்ததியை உவமையாக எடுத்துச் சொல்வார்கள். அருந்ததி கற்பிலே மிகவுஞ் சிறந்தவள். அவள் வசிட்டருடைய மனைவி.

அருந்ததி தன் நாயகராகிய வசிட்டரை விட்டு ஒருகாலத்தும் பிரியாள். அதுபோலக் கற்புடைய பெண்களும் தங்கள் நாயகரை விட்டுப் பிரிந்து திரியமாட்டார்கள்.

கற்புடைய பெண்கள் தங்கள் நாயகரையே தெய்வமாகக்கொண்டு வழிபடுவார்கள் அவருடைய

குறிப்பின்படியே நடப்பார்கள். அவர்களோடு கோபித்து எதிர்த்துப் பேசமாட்டார்கள்.

முற்காலத்திலே பல பெண்கள், தங்கள் உயிர்போன்ற நாயகர் இறந்தபோது, தாமும் கூட இறந்தார்கள். இக்காலத்திலும் அப்படிப்பட்டவர் சிலர் இருக்கிறார்கள்.

நாயகனுக்கு உணவு கொடுத்தல், வீட்டுக்கு வந்தவர்களை உபசரித்தல் முதலாகப் பன்னிரண்டு காரியங்கள் பெண்களுக்குச் சொல்லப்பட்டிருக்கின்றன.

அருந்ததியல்லாமல் சாவித்திரி முதலாக வேறு பல கற்புடைய பெண்களும் இருந்தார்கள்.

---

## ௩௨. யானைகண்ட குருடர்.

யானை இப்படிப்பட்டது என்பதை அறியாத பல பிறவிக்குருடர், அதை அறிய விரும்பி, ஒரு யானை நிற்கிற இடத்துக்குப் போனார்கள்.

ஒரு குருடன், அந்த யானையின் காலை மாத்திரம் தடவிப் பார்த்துவிட்டு, யானை உரல்போல் இருக்கும் என்றான்.

மற்றொருவன், அதன் துதிக்கையைத் தடவிப் பார்த்துவிட்டு, அது உலக்கைபோல் இருக்கும் என்றான்.

மற்றொருவன், அதன் காதைத் தடவிப் பார்த்துவிட்டு, அது சுளகுபோல் இருக்கும் என்றான்.

மற்றொருவன், அதன் வாலைத் தடவிப் பார்த்து விட்டு, அது விளக்குமாறு போல் இருக்கும் என்றான்.

இப்படியே எல்லாரும், ஒவ்வொரு உறுப்பைத் தடவிப் பார்த்துவிட்டு, ஒவ்வொன்று போல் இருக்கும் என்றார்கள்.

நல்ல கண்ணுடையவன் ஒருவன் இவர்களைப் பார்த்து, இவர்களுடைய அறிவு இப்படியா என்று சொல்லிக் கவலைப்பட்டு, அவர்களைக் கொண்டு யானையை முழுதும் தடவுவித்து, அது இப்படிப் பட்டது என்று அதனுடைய உண்மையைச் சொன்னான்.

---

## ௩௫. ஒரு யுத்திமானான சோதிடன்.

ஒரு தேசத்திலே ஒரு பெரிய இராசா இருந்தான். அவன் தன்னுடைய பட்டணத்தில் இருந்த பிரதானமான சோதிடனை அழைத்து, நீ ஆகாயத்திலுள்ள நட்சத்திரங்கள் எல்லாவற்றையும் எண்ணி இவ்வளவென்று எட்டு நாளைக்குள் எனக்கு அறிவித்தல் வேண்டும். இல்லையானால் உன்னுடைய தலையை வெட்டிப் போடுவேன்" என்றான்.

சோதிடன் அது கேட்டுப் பயந்து யோசனை செய்து, தனக்குள்ளே ஒரு யுத்தி பண்ணிக்கொண்டான். அவன் ஏழு நாளும் சும்மா இருந்து விட்டு, எட்டாம்நாள் இராசாவுடைய சபைக்குப் போனான். இராசா அவனைப் பார்த்து, "கணக்கு எடுத்து விட்டாயா" என்றான். சோதிடன் "பாதிக்கணக்கு எடு

ந்து விட்டேன். இன்னும் பாதி இருக்கிறது. அதற்காக இன்னும் எட்டு நாள் தால் வேண்டும். என்றான். இராசா, "அப்படியே ஆகுக" என்றான்.

சோதிடன் மறுபடியுஞ் சும்மா இருந்து விட்டு, எட்டாம் நாள் ஏதோ எழுதப்பட்ட பெரிய பழங் காகிதக் கட்டுக்களோடும், எழுதுகோல் முதலிய வைகளோடும் இராச சபைக்குப் போனான்.

இராசா அவனைப் பார்த்து, "கணக்கு எடுத் தாய் விட்டதா" என்றான். சோதிடன் "ஆகா! ஆய் விட்டது." என்றான். இராசா "எவ்வளவு? சொல் லுக" என்றான். சோதிடன் ஏதோ கணக்குக் கூட்டு கிறவன் போலக் கூட்டி "ஒரு கோடியே முப்பத் தைந்து லக்ஷத்து நாற்பத்திராயிரத்து மூன்று" என் றான்.

இராசா "இத்தொகை சரி என்பதை நான் எப் படி நம்புகிறது?" என்றான். சோதிடன் "மகாரா சாவே, என்னுடைய கணக்குச் சரி; சந்தேகப்பட் டால் தாங்களே அந்த நட்சத்திரங்கள் எல்லாவற் றையும் எண்ணிப் பார்த்துக்கொள்ளலாம்" என்றான்.

---

## ௬௫, ௬௬. ழகர ளகர றகர ரகரங்கள்.

சிலர், ழகர ளகரங்களுக்கு வேறுபாடு அறியா மல், ஒன்று வழங்க வேண்டிய இடத்திலே மற்றதை வழங்குகிறார்கள்.

வாழை-ஒரு மரம்.
வாளை-ஒரு மீன்.

கிழி-சீலை, சீலைமுடிச்சு.
கிளி-ஒரு பறவை.
கழி-ஒருணவு, சேற்றுநிலம்.
களி-சந்தோஷம்.
வழி-மார்க்கம், தெரு.
வளி-காற்று.
ஆழி-கடல், மோதிரம், வட்டம்.
ஆளி-ஒருசிறுவை.
அழித்தல்-இல்லாமற் பண்ணுதல்.
அளித்தல்-காத்தல்.
ஒழித்தல்-இல்லாமற் பண்ணுதல்.
ஒளித்தல்-மறைத்தல்.
கிழவி-வயசுபோனவள்.
கிளவி-சொல்லு.
அழகு-வடிவு.
அளகு-பெண்பறவை.
உழைத்தல்-செய்தல்.
இளைத்தல்-வருந்துதல்.
கோழை-பெலஹீனன்.
கோளன்-கோளையுடையவன்.

வேறு சிலர், றகர ரகரங்களுக்கு வேறுபாடு அறியாமல் ஒன்று வழங்க வேண்டிய இடத்திலே மற்றதை வழங்குகிறார்கள்.

எறிதல்-வீசுதல்.
எரிதல்-நெருப்புச் சுவாலித்தல்.
பறத்தல்-சிறகடித்துப் போதல்.
பரத்தல்-எங்குஞ் செறிதல்.
கறையான்-செல்லு.

கரையான்-மீன்பிடிக்கிறவன்.
சற்பம்-பிதற்றுதல்.
சர்ப்பம்-பாம்பு.

---

## ௬௮. கைத்தொழில்கள்.

தச்சர் மரவேலை செய்வர். கொல்லர் இரும்பு வேலை செய்வர். கன்னார் பித்தளை வேலையும், தாமிர வேலையும், வெண்கல வேலையும் செய்வர். தட்டார் பொன் வேலையும், வெள்ளி வேலையும், இரத்தினாபரண வேலையும் செய்வர். குயவர் மட்பாண்டம் செய்வர். செம்மார் தோல்வேலை செய்வர். நெய்வார் சீலைகள் நெய்வர். இவைகள் எல்லாம கைத்தொழில்கள் என்று சொல்லப்படும்.

கைத்தொழில்கள் இன்னும் பல உள. அவை காகிதம் செய்தல், நெருப்புப் பெட்டி செய்தல் கண்ணாடி செய்தல், குடை செய்தல், மணிக்கூடு முதலிய யந்திரம் செய்தல், பன்னவேலை செய்தல், சித்திரவேலை செய்தல் முதலானவைகளாம்.

காகிதமும் கண்ணாடியும் இந்தியாவிலுஞ் செய்யப்படுகின்றன. நெருப்புப்பெட்டி இலங்கையிலுஞ் செய்யப்படுகின்றது' மணிக்கூடு முதலிய யந்திரங்களும் குடைகளும் ஐரோப்பா முதலிய பிற தேசங்களிலே மாத்திரஞ் செய்யப்படுகின்றன. ஓலைகளாலும் புற்களாலும செய்யப்படுகிற வேலை பன்னவேலை எனப்படும். இது இலங்கையிலுஞ் செய்யப்படுகின்றது. சித்திரவேலை எல்லாத் தேசங்களிலும் உண்டு.

---

## ௧௯. புகைவண்டிப் பிரயாணம்.

புகைவண்டியிலே பிரயாணஞ் செய்ய விரும்புகிறவர்கள் புகைவண்டி ஸ்தானத்திலே போய்ப் பணங் கொடுத்து ஒரு துண்டு பெற்றுக்கொள்ளல் வேண்டும். அத்துண்டிலே தாம் போக விரும்பும் ஊரினுடைய பெயர் மாறாமல் எழுதப்பட்டிருக்கின்றதோ என்று பார்த்துக்கொள்ளல் வேண்டும். தாம் கொடுத்த பணத்தொகை அதில் சரியாக எழுதப் பட்டிருக்கின்றதோ என்றும் பார்த்துக்கொள்ளல் வேண்டும். பின் தாம் ஏறவேண்டிய வகுப்பு வண்டியிலே ஏறிக்கொள்ளல் வேண்டும். சில வேளைகளில் இத்துண்டு சரியோ என்பதைச் சோதித்தற்கு சில உத்தியோகத்தர்கள் வருவார்கள். அவர்கள் கேட்ட உடனே காட்டும்பொருட்டு, இத்துண்டை மடியிலே வைத்துக்கொள்ளல் வேண்டும். இதனை இழந்துவிட்டால் அதிக நட்டங் கொடுக்கவேண்டி வரும்.

புகைவண்டியிலே பிரயாணம் பண்ணுகிறவர்கள் சில்லறைப் பணம் மடியில் வைத்துக்கொள்ளல் வேண்டும். தங்களுடைய பெட்டி முதலானவைகளை அவைகள் வைத்தற்குரிய இடத்திலே வைத்தல் வேண்டும். அவர்கள் சொற்ப நிறையுள்ள பொருள்களை மாத்திரம், செலவில்லாமல் தாங்கள் ஏறும் வண்டியில் வைத்துக்கொள்ளலாம். பெரும்பாரமான பொருள்களைச் செலவு கொடுத்து வேறு வண்டியில் ஏற்றிவித்துக்கொள்ளல் வேண்டும். அவர்கள் வண்டியில் இருக்கும்போது சுருட்டுப் பிடித்தல், வண்டிக்குள் எச்சில் உமிழ்தல் முதலானவைகளைச் செய்தலாகாது. வண்டி நின்றபின் அல்லாமல் ஓடும்

போது அதில் ஏறவுங் கூடாது. அதினின்றும் இறங்கவுங் கூடாது.

புகைவண்டியிற் பிரயாணஞ் செய்யும் கைக்குழந்தைகளுக்காகச் செலவு கொடுக்க வேண்டியதில்லை. சிறுவர்களுக்குப் பாதிச் செலவு கொடுத்தாற் போதும்.

---

## ௩0. ஆண்பால் பெண்பால்.

| ஆண்பால் | (இதற்குப்) | பெண்பால் |
|---|---|---|
| சிவன்... | ... ... | சிவை |
| குரவன் | ... ... | குரத்தி |
| ஐயன் | ... ... | ஐயை |
| தச்சன் | ... ... | தச்சிச்சி |
| மகன் | ... ... | மகள் |
| புதல்வன் | ... ... | புதல்வி |
| தமயன் | ... ... | தமக்கை |
| பார்ப்பான்... | ... | பார்ப்பனி |
| தலைவன் | ... ... | தலைவி |
| நாயகன் | ... ... | நாயகி |
| களிறு | ... ... | பிடி |
| சேவல் | ... ... | பேடு |
| நம்பி | ... ... | நங்கை |
| சிறுவன் | ... ... | சிறுமி |

---

## ௩௧. கோமுட்டி.

ஒரு இராசாவின் வீட்டிலே ஒரு கலியாணம் நடந்தது. அதற்காக அந்த இராசா தன் ஊரிலே

இருந்த கோமுட்டிகளை அழைத்து, "நீங்கள் எல்லீ ருமே இந்த வீட்டுக்குள்ளே சீலையால் வாய்கட்டி வைக்கப்பட்டிருக்கும் பாத்திரத்தில், ஒவ்வொருபடி பால் கொண்டுவந்து விடுதல் வேண்டும்" என்று சொன்னான்.

கோமுட்டிகள் எல்லாரும், நான் மாத்திரம் ஒருபடி தண்ணீர் விட்டால் தெரியுமா என்று தனித் தனி நினைத்து, ஒருவரை யொருவர் அறியாமல், ஒவ்வொரு படி தண்ணீர் கொண்டுபோய் விட்டார் கள். பின் இராசா சீலையை அவிழ்த்துப் பாத்திரத் தைப் பார்த்தபோது, அதில் தண்ணீரல்லாமல் வே றொன்றையும் காணவில்லை.

இப்படியே, ஆறு உபாத்திமார் படிப்பிக்கிற ஒரு பள்ளிக்கூடத்தில், ஒருநாள், இன்றைக்கு நான் மாத்திரம் போகாமல் விட்டால் பள்ளிக்கூடம் நட வாதா? மற்றை உபாத்திமார் படிப்பிப்பார் என்று நினைத்து, எல்லாரும் போகாமல் நின்றுவிட்டார்கள்.

அன்று, பிள்ளைகள் வந்து பார்த்துவிட்டுத் திரும்பி வீட்டுக்குப் போனார்கள்.

## ௩௨. யானை.

முறம்-சுளகு. நான்றல்-தூங்குதல்.
மா-விலங்கு. சேனை-படை.

மிருகங்கள் எல்லாவற்றுள்ளும் யானையானது உருவத்தால் மிகப் பெரியது. யானைக்குக் கொம்பு கீழ்நோக்கி வளருகின்றது. அதனுடைய மூக்கு நிலம் வரையும் நீண்டு, கைபோல அதற்கு உதவுகின்

றது. அதற்குத் துதிக்கை என்று பெயர். யானையி னுடைய செவி முறம்போல இருக்கும். யானையி னுடைய உயரத்துக்குத் தக்கபடி கழுத்து நீளமில் லாமையால், துதிக்கையே தீன் முதலானவைகளை எடுத்துக் கொண்டுபோய் வாயிற் கொடுக்கும். யானை வேலை செய்கிறதும் அத் துதிக்கையினாலேயே.

யானையானது, மலைபோன்றிருத்தலால் கைமலை என்றும், கையை உடைமையால் அத்தி என்றும், கைமா என்றும், தூங்குகின்ற வாயை உடைமை யால் நால்வாய் என்றும் பெயர் பெறும்.

யானை மனிதரைப்போல ஆறறிவு உடையது என்று சிலர் சொல்லுவார்கள். யானை, பாகன் சொல் வதை அறியவும், செய்யவும் வல்லது. பழக்கப்பட்ட யானைகள் மனிதரைப்போல நின்று பாரமான வேலை களைச் செய்யும். இராசாக்களுக்கு உரிய நால்வகைச் சேனைகளுள் யானையும் ஒன்று. யானையினுடைய தொம்பு மிக விலைபெற்றது.

இலங்கையில் உள்ள யானையையே எல்லாரும் விரும்பிக் கொள்ளுகிறார்கள்.

---

## சஙு. மாமிசபோசனம்.

| | |
|---|---|
| பெலம்-வலிமை. | வதைத்தல்-கொல்லுதல். |
| உறக்கம்-நித்திரை. | யாகம்-வேள்வி. |

மாமிசம் என்பது இறைச்சி. அநேக சனங்கள் அறியாமையினாலே, மாமிசம் புசிக்கிறது சரீரபெலத் துக்குக் காரணம் என்று எண்ணுகிறார்கள். பதார்த்த

சாரம் அருந்தவர்கள், சேழ்வாகு முதலான வைகள் மாமிசத்திலும் மிக்க பெலமுடையவை என்று உறுதி செய்திருக்கிறார்கள். மிருகங்களுள்ளே யானை மிக்க பெலமுடையது. அதற்குக் காரணம் மாமிசபோசனம் அன்று. யானை மாமிசம் தின்னுகிற தில்லை; இலை புல்லு முதலானவைகளையே தின்னு கின்றது.

மாமிசம் தின்னுகிற மிருகங்களுடைய பற்கள் இடைவெளி உள்ளனவாயும், கூர்மை பொருந்தின வைகளாயும் இருக்கின்றன. அது தின்னாத மிருகங் களுடைய பற்களோ, இடைவெளி இல்லாதனவா யும், கூர்மை அற்றனவாயும் இருக்கின்றன.

விலங்கு பறவை என்னும் இவைகள், நம்மைப் போல உயிருடையவைகள். அவைகளுக்கும், நமக் குப்போல, உணவு உறக்கம் இன்பம் துன்பம் முத லிய குணங்கள் உண்டு. அவைகளை ஒருவன் கொல் லும்போது, அவைகள் எவ்வளவு வருத்தப்பட்டு உயிரை விடுகின்றன. நம்மை ஒருவன் வதைத்துத் தின்ன நாம் விரும்புவோமா! இல்லையே. நமக்கு வேறொருவர் செய்ய நாம் விரும்பாதது ஒன்றை, நாம் வேறோருயிருக்குச் செய்தால், நம்முடைய அறி வால் என்ன பயன்.

திருவள்ளுவநாயனார், ஆயிரம் யாகம் செய்கிற திலும் பார்க்க ஒன்றினுடைய உயிரைக் கொன்று அதன் மாமிசத்தைத் தின்னாமை நன்று என்றார்.

## சச. பசு.

ஆதி-முதல் விருத்தியாதல்-அதிகப்படுதல்.
அவயவம்-உறுப்பு. ஆ-பசு

மிருக சாதிகளுள்ளே பசுவானது மிக மேலான பிறப்பு. அது ஆதியில் சிவலோகத்தினின்றும் வந்தது என்று சாத்திரங்கள் சொல்லும். அதினுடைய ஒவ்வொரு அவயவத்திலும் தேவர்கள் இருக்கிறார்கள். பசு மிக்க சாதுவாகிய குணம் உடையது.

பசுத் தரும் பால் தயிர் நெய் கோசலம் கோமயம் என்னும் ஐந்தும் பஞ்ச கவ்வியம் எனப்படும். கோரோசனையும் பசுவினின்று கொள்ளப்படுகின்றது. இவைகளெல்லாம் சுவாமிக்கு அபிஷேகத்துக்கு உரியனவாகும். பசுவின் பாலை உண்ணுதலினாலே ஆயுள் விருத்தியாகும். பசுவின் நெய்யை உண்ணுதலினாலே புத்தி விருத்தியாகும். பசுவின் மூத்திரமும் சாணமும் பயிர்களுக்கு நல்ல எருவாகும். கோரோசனை மருந்துகளுக்கு மிகுதியுஞ் சேருகின்றது. பஞ்சகவ்வியம் சுத்திக்குங் காரணமாயிருக்கின்றது.

பசுக்களுக்குப் புல்லுக் கொடுத்தலும் தண்ணீர் ஊட்டுதலும் ஆவுரிஞ்சுகல் நாட்டுதலும், பெரும் புண்ணியங்களாம்.

பசு மேய்க்கிறவர்கள் இடையர்கள் எனப்படுவார்கள்.

---

## ௪௫. புட்பம்.

பேதம்-வேறுபாடு. வாசஞ்செய்தல்-இருத்தல்.
தீபம்-விளக்கு. இருதயம்-மனம்.

புட்பங்கள் நான்கு வகைப்படும். அவை கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ என்பனவாம்.

கோட்டுப்பூக்களாவன:—வன்னி, கோங்கு, மந்தாரை, அகில், மகிழ், மாதுளை, பாதிரி, பலாசு, புன்னை, கொன்றை, செருந்தி, குருந்து, ஆத்தி, அலரி, பவள மல்லிகை, சண்பகம் முதலானவைகளாம்.

கொடிப்பூக்களாவன:—காந்தள், முல்லை, மல்லிகை, கருங்காக்கொன்றை, வெண்காக்கொன்றை, குருக்கத்தி, இருவாட்சி, பிச்சி முதலானவைகளாம்.

நீர்ப்பூக்களாவன:—தாமரை, உற்பலம், நெய்தல் முதலானவைகளாம்.

நிலப்பூக்களாவன:—செவ்வந்தி, தும்பை, வெட்டிவேர், மருக்கொழுந்து, கரந்தை, விஷ்ணுகாந்தி, துளபம், கொக்கிறகு, நந்தியாவர்த்தம் முதலானவைகளாம்.

அட்டபுட்பங்களாவன:—புன்னை, வெள்ளெருக்கு, சண்பகம், நந்தியாவர்த்தம், நீலோற்பலம், பாதிரி, அலரி, செந்தாமரை என்பனவாம்.

### தாமரை.

பூக்களுக்குள்ளே தாமரைப்பூ மிகச் சிறந்தது. தாமரையிலே வெண்டாமரை செந்தாமரை பொற்

தாமரையுடைய இலையிலே தண்ணீர் பற்றுகிற தில்லை. அதன் இலையிலே விழுந்த தண்ணீர் முத்துப் போலத் திரண்டுகொள்ளும். தாமரையிலை போசன பாத்திரங்களுள் ஒன்று.

தாமரையின் நாளம் மருந்துக்கும், அதன் நூல் தீபத்துக்கும் உபயோகப்படுகின்றன. தாமரை நாளத்திலே முட்கள் இருக்கின்றன. தாமரைக்கொடி இருக்கிற குளங்களிலே இறங்கி நீந்தி விளையாடுகிற வர்கள் சிலர் அதிலே அகப்பட்டு இறந்துபோகிறார் கள்.

தாமரைப் பூவானது சூரியனால் அலர்த்தப்படு கின்றது. பிரமா இலக்குமி சரசுவதி முதலானவர் கள் தாமரைப் பூவிலே வாசஞ் செய்கிறார்களென்று சொல்லப்படுகின்றது. நமது இருதயத்திலும் ஒரு தாமரைப்பூ இருக்கின்றது. அதில் உயிர்க்கு உயிரா யுள்ள கடவுள் இருக்கிறார்.

---

## ௪௬. உலகத்தில் எப்படி ஒழுகவேண்டும்.

துர்ச்சனர்-பொல்லாதவர்கள்.
சற்சனர்-நல்லவர்கள்.
தரும ஈனன்-தருமங் கெட்டவன்.
கிரகித்தல்-பற்றுதல், எடுத்தல்.
சத்துரு-பகைவன்.

சுற்றத்தாரிடத்தில் கண்ணோட்டமும், வேலைக் காரிடத்தில் தயையும், துர்ச்சனரிடத்தில் கபடமும் சற்சனரிடத்தில் பிரீதியும், அரசரிடத்தில் நீதியும், வித்துவான்களிடத்தில் கபடமின்மையும், பகைவரி

டத்தில் வீரமும், குருவினிடத்தில் பொறுமையும், உடையவனாய் வாழவேண்டும்.

பகைவனையும், பகைவனுடைய சிநேகிதனையும் தருமசனனையும், திருடனையும் ஒருபோதும் சேரலாகாது.

விஷத்துக்குள்ளே இருந்தாலும் அமிர்தத்தை எடுக்கவேண்டும். சிறுவர்களிடத்தில் நின்றாயினும் நல்ல வார்த்தையைக் கிரகிக்க வேண்டும். சத்துரு விடத்தில் நின்றாயினும் நல்ல நடையைக் கிரகிக்க வேண்டும்.

பாடும்போதும், வாத்தியம் வாசிக்கும்போதும், கூத்தாடும்போதும், போர் செய்யும்போதும், போசனம் பண்ணும்போதும், வெட்கத்தை விட்டு விடல் வேண்டும்.

---

## சஎ. சிநேகம்.

சிநேகப்-நட்பு.
ஆபத்து-இடுக்கண், துன்பம்.

பொல்லாதவர்களோடு ஒருகாலத்தும் சிநேகம் பண்ணல் ஆகாது. பொல்லாதவர்கள் தங்களோடு கூடின நல்லவனையும், பொல்லாதவனாக்கி விடுவார்கள். நல்லவர்களோ, தங்களோடு கூடின பொல்லாதவனையும், நல்லவனாக்கி விடுவார்கள். ஆதலால் நல்லவர்களோடேயே சிநேகம் பண்ணல் வேண்டும்.

ஒருவனோடு சிநேகம் பண்ணுமுன், அவன் எப்படிப்பட்டவன் என்பதை நன்றாக அறியவேண்டும். அறியாமற் சிநேகம் பண்ணக்கூடாது. நல்லவர்களோடு பண்ணின சிநேகத்தை விடவும் கூடாது.

சிலர், தங்களோடு கூடிச் சிரித்து வேடிக்கையான கதை பேசுகிறவர்களையும், சிலர், தாங்கள் சொல்லுகிறவற்றிற்கு "ஆம் ஆம்" என்று சொல்லுகிறவர்களையும், சிலர், முகமன் வார்த்தை பேசுகிறவர்களையுமே, சிநேகிதர்களாகக் கொள்ளுகிறார்கள். நமக்கு ஆபத்து வரும்போது, அதினின்றும் நம்மைக் காக்கிறவர்களையும் நாம் கெட்டவழிகளிலே போகும் போது, தடுத்துப் புத்தி சொல்லுகிறவர்களையுமே நாம் சிநேகிதர்கள் என்று கொள்ளல் வேண்டும்.

---

## சஅ. வேஷம்போட்ட கழுதை.

வஸ்திரம்- சீலை.
பெட்டை-சிலமிருகங்களுடைய பெண்.
தொனி-சத்தம்.
சீக்கிரம்-விரைவு.

ஒரு வண்ணானுடைய கழுதை, அதிக பாரஞ் சுமந்ததினாலே, மிகவும் மெலிந்து போயிற்று. வண்ணான் அதைப் புலித் தோலினாலே போர்த்து, காட்டுக்குச் சமீபத்தில் உள்ள வயல்களிலே கொண்டு போய் மேயும்படி விட்டனன். வயற்காரர்கள், அதைத் தூரத்திலே கண்டு, புலி என்று பயந்து ஓடிவிட்டார்கள்.

காவற்காரர்களுள் ஒருவன் ஒருநாள், தன்னைக் கழுதை நின்றுடைய வஸ்திரத்தினால் மூடிக்கொண்டு அந்தக்கழுதையாகிய புலியைக்கொல்லும்படி வில்லை வளைத்து அம்பினால் எய்ய இருந்தான். புலித்தோல் போர்த்த கழுதையானது, அவனை ஒரு பெட்டைக் கழுதை என்று எண்ணி, கனைத்துக்கொண்டு அவன் சமீபத்தில் வந்தது. காவற்காரன் அதன் தொனியைக் கேட்டு, கழுதை என்று அறிந்து, உடனே அதனை அடித்துக் கொன்றனன்.

வேஷம்போட்டால், அதற்குத் தக்கபடி நடக்க அறியாதவர்கள், சீக்கிரம் அகப்பட்டுக் கொள்ளுவார்கள்.

---

## ௩௬. ஆலாகலம்.

தேவர்-புண்ணியம் செய்து சுகமனுபவிக்கும் மேலான ஒரு பிறவியைப் பெற்றவர்.
அமிர்தம்-சாவாமல் இருக்கச் செய்யும் மருந்து.
பதி-தலைவர்.
அஞ்சி-பயந்து.
அடையாளம்-அறிகுறி.
கண்டர்-கழுத்தையுடையவர்.

ஒரு காலத்தில், தேவர்களும், அசுரர்களும், அமிர்தத்தைப் பெற விரும்பி, பாற்கடலைக் கடைந்தார்கள். அவர்கள், கடையமுன், எல்லாவற்றிற்கும் தலைவராகிய சிவபெருமானைப் பூசிக்கவில்லை. அதனால் அப் பாற்கடலில் நின்றும் ஆலாகலம் என்னும் விஷம் தோன்றினது. தோன்றிய அவ்விஷம், தேவர்கள் அசுரர்கள் முனிவர்கள் எல்லாரையும் வருத்தத்

தொடங்கினது, உடனே அவர்கள் எல்லாரும் ஓடிப் போய்க் கைலாச பதியாகிய பரமசிவனிடத்தில் அடைக்கலம் புகுந்தார்கள். அவர், அவ் விஷத்தைத் தருவித்து உண்டு, தமது திருக்கழுத்தில் வைத்துக் கொண்டார். அதனால் விஷ்ணு முதலானவர் எல்லாரும், சாவாமல் பிழைத்தார்கள். அவர், அவ்விஷத்தைக் கழுத்தில் வைத்திருக்கிறது, அஞ்சி வந்தவர்களைக் காப்பவர் என்பதற்கு அடையாளமாய் இருக்கின்றது. விஷத்தைக் கழுத்தில் உடைமையால் சிவபெருமான் நீலகண்டர் என்றும், கறைக்கண்டர் என்றும் சொல்லப்படுவர்.

---

## ருo. வீடு.

| | |
|---|---|
| வெளிச்சம்-ஒளி. | நூல்கள்-சாத்திரங்கள். |
| வேய்தல்-மூடுதல். | வசித்தல்-இருத்தல். |
| புகுதல்-பிரவேசித்தல். | விதி-முறை. |

வீட்டிலே இருக்கிறதினாலே, மழை வெய்யில் காற்று முதலானவைகள் நம்மை வருத்தமாட்டா. நம்முடைய பொருள்களையும் கள்ளர் முதலானவர்கள் கொண்டுபோக மாட்டார்கள். நம்முடைய இரகசியமான காரியங்களைப் பிறர் அறியவும் மாட்டார்கள்.

சிலர், வீட்டை வெறுமையாய்க் கிடக்கும்படி, பெரிதாய்க் கட்டுகிறார்கள். அது ஆகாது. ஔவையாரும்: "இடம்பட வீடெடேல்" என்றார். வீடுகள் உயரமாயும், வெளிச்சமும் காற்றும் வரத்தக்கவைகளாயும், பெலம் உடையவைகளாயும் இருத்தல்

வேண்டும். வீடுகளைக் காலந்தோறும் பழுது பார்த்தல் வேண்டும். வீடுகட்டுதல், வீடுவேய்தல், குடிபுகுதல் முதலானவைகளெல்லாம், அததற்குச்சொல்லப்பட்ட காலங்களிலே செய்தல் வேண்டும். வீடு கட்டுகிற விதி நூல்களிலே சொல்லப்பட்டிருக்கின்றது. விதிப்படி கட்டப்பட்ட வீட்டில் வசிப்பவர் குறைவு ஒன்றும் இல்லாமல் வாழ்வார்.

---

## ருக. கடல்.

சூழ்தல்-சுற்றுதல்.
தரை-நிலம்.
உவர்த்தன்மை-உப்புத்தன்மை
ஊறுதல்-பெருகுதல்.

பூமியில், அதிகமான இடம், கடலாயிருக்கின்றது. கடலானது நிலத்தை எல்லாப் பக்கங்களிலும் சூழ்ந்திருக்கின்றது. நிலத்திலே பெய்கிற மழைநீரில், அங்கங்கே வேண்டிய அளவுக்கு மேற்பட்டவைகள் எல்லாம், ஆறுகளாய்ப் பாய்ந்து, கடலில் விழுகின்றன. கடல் இல்லாது போனால், அதிகமான இந்த மழை நீர் ஊரை அழித்துவிடும்.

ஒரு தேசத்தில் உள்ள பொருளை, வேறு ஒரு தேசத்துக்கு வண்டியில் ஏற்றிக்கொண்டு தரைவழியாகப் போவதிலும், தோணியில் ஏற்றிக்கொண்டு கடல்வழியாகப் போகிறது இலகுவாகும். தோணியைக் காற்றுத் தள்ளிச் செல்லும். காற்று இல்லாதபோதும் யந்திரங்கள் தள்ளிச் செல்லும்.

கடலில உள்ள நீர் உவர்த்தன்மை உடையது ஆயினும், கடற்கரைகளிலே சுத்தமான நீரும் ஊறு கின்றது. கடலில் நீர் காற்றினால் அலைகளாய் எழும் பும். கடலினது ஆழம், சில இடங்களிலே ஐந்து மைலுக்கு மேலே இருக்கின்றது.

முத்து பவளம் என்னும் இரத்தினங்கள் கட லில் உண்டாகின்றன.

---

## ரு௨. சந்திரன்.

| | |
|---|---|
| கலை-பங்கு. | கிருஷ்ணம்-கருமை. |
| பூர்வம்-முன். | களை-மறு. |
| சுக்கிலம்-வெண்மை. | ஆரவாரிக்கும்-ஒலிக்கும். |
| அபரம்-பின். | |

இரவிலே நமக்கு ஒளியைத் தருகிறது சந்திரன். சந்திரனுடைய ஒளி நிலா என்றும், சந்திரிகை என் றும் சொல்லப்படும். சந்திரிகை மிக்க குளிர்மை உடையது.

சந்திரனுக்குப் பதினாறு கலைகள் உண்டு. அவை வளர்கிறதும் தேய்கிறதுமாய் இருக்கும். பதினைந்து நாள் வளரும்; பதினைந்து நாள் தேயும். சந்திரனு டைய கலைகள் வளருகிற பதினைந்து நாளும் பூர்வ பக்கம் என்றும், சுக்கில பக்கம் என்றும், சொல்லப் படும். அவை தேய்கிற பதினைந்து நாளும், அபரபக் கம் என்றும், கிருஷ்ணபக்கம் என்றும் சொல்லப் படும். எல்லாக் கலைகளும் நிறைந்திருக்கிற நாள் பௌர்ணிமை. ஒரு கலை மாத்திரம் இருக்கிற நாள் அமாவாசை. அமாவாசையில் சந்திரனும் சூரியனும்

கூடவரும். சந்திரனைக் கண்டால் கடலில் உள்ள நீர் ஆரவாரிக்கும்.

சந்திரனிலே தெரிகிற மறு, முயற்கறை என்றும், மான்கறை என்றும், சொல்லப்படும். அந்த மறுவைச் சிலர் கடல் என்றும், சிலர் மலை என்றும் சொல்லுகிறார்கள்.

---

## ருடு. மரங்கள்.

| | |
|---|---|
| வித்து-விதை. | மோந்தும்-மணந்தும். |
| கிளை-கொம்பு. | செதிள்-தோல். |
| பயன்-பிரயோசனம். | மரக்கலம்-தோணி. |
| மிருது-மெது. | தபித்தல்-சுடுதல். |
| கனி-பழம். | உடம்பு-சரீரம். |

சில மரங்கள் வித்திலே உண்டாகின்றன; சில மரங்கள் வேரிலே உண்டாகின்றன; சில மரங்கள் கிளையிலே உண்டாகின்றன; சில மரங்கள் வித்து வேர் கிளை எல்லாவற்றிலும் உண்டாகின்றன.

மரங்கள் நமக்கு மிகவும் பயன் படுவன. மரங்களுடைய கனி காய் இலை முதலானவைகள் நமக்கு உணவாகின்றன. அவற்றில் நல்ல மணம் உள்ள மிருதுவான பூவை, மோந்தும் சூடியும் கொள்ளுகிறோம். சில மரங்கள் வேர்கள் செதிள்களாலும் பயன படுகின்றன. அநேக மரங்கள், வீடுகள் கட்டவும், வீட்டு உபகரணங்களும் மரக்கலம் முதலானவைகளும் செய்யவும், உதவுகின்றன. வெய்யிலினாலே தபித்து வருகிறவர்களுக்கு, மரங்கள் நல்ல குளிர்ந்த நிழலையும் கொடுக்கின்றன.

மனிதருடைய சரீரத்தில் இரத்தம் ஓடிக்கொண்டிருத்தல்போல, மரங்களிலும் பால் ஓடிக்கொண்டு இருக்கும். அந்தப் பால், பலா மா முதலான மரங்களில் நன்றாகத் தெரியும். அந்தப் பாலினுடைய ஓட்டம் இல்லாது போனால், மரங்கள் பட்டுப்போம். மரங்களை வெட்டினால் அவை வாடும்.

---

## ருக. கடிகாரயந்திரம்.

மினிற்று-ஒருமணிப் பொழுதில் அறுபதில் ஒரு பங்கு. இது இங்கிலிசுச் சொல்.
செக்கண்டு-இது ஒரு மினிற்றில் அறுபதில் ஒரு பங்கு, இது இங்கிலிசுச் சொல்.
வல்லவர்-இயன்றவர்.
ஆயுள்-வாழ்நாள்.

கடிகாரயந்திரம் என்பது மணிக்கூடு எனப்படும். மணிக்கூடு இந்தக் காலத்தில் பள்ளிக்கூடங்கள் வீடுகள் எங்கும் இருக்கின்றது. மணிக்கூட்டினாலே நேரத்தை அறிகிறோம், அதில் பெரிய எழுத்திலே பன்னிரண்டுவரையும் உள்ள இலக்கங்கள் எழுதப்பட்டிருக்கின்றன. இவற்றிற்கு இடையிடையே ஐவைந்து சிறிய கீறுகளும் எழுதப்பட்டிருக்கின்றன. மணிக்கூட்டில் ஒரு சிறிய கம்பியும் ஒரு பெரிய கம்பியும் எப்பொழுதும் சுற்றிக்கொண்டே வரும். சிறிய கம்பி மணியையும், பெரியகம்பி மினிற்றையும் காட்டும். சிறியகம்பி, பெரிய எழுத்திலுள்ள ஒரு எண்ணிலிருந்து மற்ற எண்ணுக்கு வர ஒரு மணிப்பொழுது செல்லும். பெரிய கம்பி, ஒரு கீற்றிலிருந்து மற்றக் கீற்றுக்கு வர ஒரு மினிற்றுச்

செல்லும். ஒரு நாளில், சிறியகம்பி இரண்டுதரமும், பெரியகம்பி இருபத்துநான்குதரமும், சுற்றிவரும். சில மணிக்கூடுகளில், செக்கண்டு என்னும் கால அளவையையும், தேதியையும் காட்டுகிற கம்பிகளும் உண்டு.

மணிக்கூடு வைத்திருக்கிறவர் அந்த அந்த வேலையை அந்த அந்த நேரத்தில் செய்யவல்லவராவர். மணிக்கூடு நம்முடைய ஆயுளை அளக்கிற கருவிபோல இருக்கின்றது.

---

## ருரு. வஸ்திரம்.

உரோமம - மயிர்.

வஸ்திரம் பஞ்சினாலும், பட்டினாலும், ஆட்டு உரோமத்தினாலும், சில மிருகங்களினுடைய தோலினாலும் உண்டாக்கப்படுகின்றது. இவைகளுள் பஞ்சு பருத்திமரத்திலே விளைகின்றது. பட்டு ஒரு பூச்சியினாலே செய்யப்படுகின்றது. வஸ்திரம் உண்டாகிற தொழில், நெய்தல் என்று சொல்லப்படும்.

பஞ்சினுடைய நிறம் சுத்தவெண்மை, பட்டினுடைய நிறம் சிறிது பொன்மை கலந்த வெண்மை. நூல்கள் பலவகையான சாயம் ஊட்டப்படுதலினாலே பலவகையான நிறம் அடைகின்றன. பலவகையான நிறமுடைய நூல்களினாலே பலவகையான வஸ்திரங்கள் நெய்யப்படுகின்றன. நூலுக்குப் பொன் வெள்ளி முதலானவைகளை ஊட்டியும் வஸ்திரம் நெய்யப்படுகின்றது.

வஸ்திரங்களைக் கையினாலே செய்கிறதிலும் யந்திரங்களினாலே வெகு சீக்கிரத்தில் செய்யலாம். ஐரோப்பியர்கள் யந்திரங்கொண்டு செய்கிறதினாலே அவர்களுடைய வஸ்திரங்கள் மிக மலிவாக விலைப்படுகின்றன. இப்பொழுது இந்தியாவிலே சில இடங்களிலும், இலங்கையிலே கொழும்பிலும், யந்திரங் கொண்டு நெய்கிறார்கள்.

---

## ௩௯. தீக்ஷை.

| | |
|---|---|
| கிரியை-தொழில். | யோக்கியர்-தகுந்தவர். |
| மச்சனம்-முழுக்கு. | சீடர்-மாணாக்கர். |
| தொண்டு-பணி. | ஓதுதல்-படித்தல். |

பஞ்சாக்ஷரம்-ஐந்தெழுத்து.

ஒரு சமயத்திலே ஒருவன் பிரவேசிக்கும்போது சில கிரியை செய்யப்படுகின்றன. கிறிஸ்து சமயத்தில் பிரவேசிக்கும்போது மச்சனம் செய்கிறார்கள். சைவசமயத்தில் பிரவேசிக்கும்போது சிவதீக்ஷை செய்கிறார்கள். ஆதலால் சிவதீக்ஷை பெற்றவரே சைவ சமயத்தில் பிரவேசித்தவர் ஆவர். அவரே சிவனது தொண்டு செய்வதற்கு உரியவர். சிவதீக்ஷை பெறாதவர் சிவத்தொண்டு செய்ய யோக்கியர் ஆகார். ஆதலால் சிவனை வழிபாடு செய்தற்குச் சிவதீக்ஷை பெறுதல் வேண்டும். சிவதீக்ஷை பெறாதவர் தேவார திருவாசகங்களை ஓதவுங் கூடாது.

சிவதீக்ஷை பெற்றவர் நியமமாக அநுட்டானம் பஞ்சாக்ஷர செபம் முதலானவைகளைச் செய்துவரல் வேண்டும், அப்படிச் செய்யாமை பாவமாகும்.

தீக்ஷை செய்கிறவர் குரு என்றும், தீக்ஷைசெய்யப்படுகிறவர் சீடர் என்றும், சொல்லப்படுவர். குரு, சீடருடைய வயசு சரீரபெலம் முதலானவைகளுக்கு ஏற்ப, பலவகையான தீக்ஷைகளைச் செய்வார் குரு சிறுபிள்ளைகளுக்கும தீக்ஷை செய்வார்.

சைவசமயகுலக்கு உரியபிள்ளைகள், சிவதீக்ஷை பெற்று, நாடோறம் அநுட்டானம் முடித்துக் கொண்டு பள்ளிக்கூடத்துக்குப் போதல் வேண்டும். அவர்கள் அநுட்டானஞ் செய்யாமல் போசனம் பண்ணலாகாது.

---

## ௫௭. முறைப்பெயர்.

பெற்றவனுக்குப் பிதா என்றும் தகப்பன் என்றும், பெற்றவளுக்குத் தாய் என்றும் மாதா என்றும் பெயர். இந்த இருவருக்கும பொதுவான பெயர் பெற்றார் என்பது. ஒரு வயிற்றில் பிறந்தவன் சகோதரன் என்றும், ஒரு வயிற்றில் பிறந்தவள் சகோதரி என்றும, இந்த இரண்டு பேரும் சகோதரர்கள் என்றும், சொல்லப்படுவார்கள். முன் பிறந்தவனுக்குப் பெயர் தமையன். பின பிறந்தவனுக்குபபெயர் தம்பி. முன் பிறந்தவளுக்குப் பெயர் தமக்கை, பின் பிறந்தவளுக்குப் பெயர் தங்கை. வளர்த்த தாய்க்குச் செவிலித்தாய் என்றும், கைத்த தாய் என்றும பெயர்.

தகப்பனுடைய தமையனுக்குப் பெரிய தகப்பன் என்றும், தகப்பனுடைய தம்பிக்குச் சிறிய தகப்பன் என்றும், தாயினுடைய தமக்கைக்குப் பெரிய தாய் என்றும், தாயினுடைய தங்கைக்குச் சிறிய தாய் என்றும் பெயர்.

தாயினுடைய சகோதரனும், பெண்ணைக் கலியாணஞ் செய்து கொடுத்தவனும், மாமன் எனப்படுவர். இவர்களுடைய மனைவிமார் மாமி எனப்படுவர்.

---

## ௩அ. இளமை.

நம்முடைய இந்த இளமை எப்போதும் இப்படியே இராது. நெற்பயிரானது ஓங்கி முளைத்து வளர்ந்து கதிர் ஈன்று, பின் இலைகள் பழுத்து காலைந்து யாசத்துள் பட்டுப் போகின்றது. புல்லும் அப்படியே முளைத்து வளர்ந்து பட்டுப் போகின்றது. எல்லாப் பயிர்களும் முளைத்த நாள் தொட்டுச் சில காலம் வளர்ந்து பின் சிறிது சிறிதாகக் குறைந்து, ஈற்றில் பட்டுப் போகின்றன. அப்படியே மனிதர்களும், பிறந்து சிலகாலத்தின் பின் நல்ல பெலம் உடையவர்களாய் இருந்து, பின் மெல்ல மெல்லக் கிழவர்களாய்த் தலை நரைத்து, பல்லுவிழுந்து, கண் மறைந்து, காது செவிடாய், இறந்துபோகிறவர்கள். இப்படி இறக்கிறது ஒருவர் இருவர் மாத்திரமன்று: எல்லாருமேயாம். ஆதலால் இந்த இளமைப் பருவம் நமக்கு எப்போதும் இருக்கும் என்று எண்ணக் கூடாது.

சிறு பிள்ளைகளாகிய நீங்கள் எல்லீரும், ஒரு காலத்தில் இப்படியே கிழவர்களாய் வருவீர்கள். ஆதலினாலே கிழவர் வியாதியாளர் முதலானவர்களைப் பரிகாசஞ் செய்தலாகாது. அவர்களுடைய வார்த்தையைக் கவனியாமல் விடலாகாது. அப்படிப் பரிகாசஞ் செய்து விடுவீர்களானால், இந்த இளமை போய் நீங்களும் கிழவராகும்போது, உங்களுக்கும் அப்படியே மற்றப் பிள்ளைகள் செய்வார்கள்.

## ருசு. இரத்தல்.

இரத்தல்-யாசித்தல். தேசாந்தரம்-பிறதேசம்.
படுதல்-உண்டாதல்.

கடவுள் இந்தப் பூமியிலே நமக்கு நல்ல விளைநிலங்களைத் தந்திருக்கிறார்; மழை பெய்ய முகில்களைத் தந்திருக்கிறார்; ஆறுகளைத் தந்திருக்கிறார். அப்படியிருக்க, நாம் பயிரிட்டுச் சீவனம்பண்ணுமல் பிறரிடத்தே போய் இரக்கிறது எவ்வளவு வெட்கம்!

மலைபடு திரவியம், காடுபடு திரவியம், நாடுபடு திரவியம், நகர்படு திரவியம்,கடல்படு திரவியம் என ஐவகைப்பட்ட திரவியங்களைக் கடவுள் நமக்குத் தந்திருக்கிறார். இவைகளையல்லாமல், பூமிக்குள்ளே பொன் வெள்ளி முதலான லோகங்களையும் வைத்திருக்கிறார். அப்படியிருக்க, நாம் அவைகளைப் பிரயாசப்பட்டுத் தேடி எடுத்துச் சீவனம் பண்ணுமல், பிறரிடத்தே போய் இரக்கிறது எவ்வளவு வெட்கம்!

இவைகளை யல்லாமல், கடவுள், நமக்குப் பேசுதற்கு வாயைத் தந்திருக்கிறார்; பார்க்கக் கண்ணைத் தந்திருக்கிறார்; வேலை செய்யக் கையைத் தந்திருக்கிறார்; கையானது எந்த எந்த அளவிலே திரும்ப வேண்டுமோ அந்த அந்த அளவிலே பொருத்துக்களைத் தந்திருக்கிறார்; நாம் பிறந்த தேசத்திலே நம்முடைய முயற்சி பயன்படாது போனால், தேசாந்தரம் போகக் காலைத் தந்திருக்கிறார்; இப்படியெல்லாம் அவர் தந்திருக்க, நாம் பிறரிடத்தே போய் இரந்து சீவனம் பண்ணுகிறது எவ்வளவு வெட்கம்.

---

## ௬௦. கீரிப்பிள்ளை.

மொள்ளல்-முகத்தல். ஊனம்-குற்றம்.
கருமம்-தொழில். தூங்குதல்-நித்திரைசெய்தல்.

ஒருத்தி ஒரு கீரிப்பிள்ளையை மிக்க அன்போடு வளர்த்து வந்தாள், ஒருநாள், அவள், தண்ணீர் மொள்ள வெளியே போகவேண்டி இருந்தமையால், தன்னுடைய குழந்தையைத் தொட்டிலில் வளர்த்தி "கீரிப்பிள்ளை ஒருபோது குழந்தையைக் கடிக்கும் பார்த்துக் கொள்ளுக" என்று புருஷனோடு சொல்லி விட்டுப் போனாள். சிறிது நேரத்தின்பின் புருஷனும் ஏதோ ஒரு கருமத்தின் பொருட்டு வெளியே போய் விட்டான். அப்போது அங்கே ஒரு பாம்பு வந்து அக்குழந்தையைக் கடிக்கப் போயிற்று. உடனே கீரிப்பிள்ளை, பாய்ந்து அப்பாம்பைத் துண்டு துண்டாகக் கடித்தெறிந்து விட்டு, குழந்தையின் தாய்க்கு இதை அறிவிக்கும்படி இரத்தந் தோய்ந்த சரீரத்தோடு ஓடிப்போனது.

அவள் கீரிப்பிள்ளையைக் கண்டு, அது தன் குழந்தையைக் கடித்து விட்டது என்று எண்ணித் தண்ணீர்க்குடத்தை அதன்மேற் போட்டுக் கொன்று விட்டாள். பின் வீட்டுக்கு வந்து பார்க்கும்போது அங்கே குழந்தை ஒரு ஊனமும் இல்லாமல் படுத்துத் தூங்கவும், அதன் சமீபத்தில் பாம்பு துண்டாய்க் கிடக்கவுங் கண்டாள். அப்போது, தன் பிள்ளையைப் பாம்பு கடியாமல் காத்த கீரிப்பிள்ளையை ஐயோ ஆராயாமல் கொன்றேனே என்று அவளுக்கு அளவில்லாத துக்கம் உண்டாயிற்று.

ஆதலால் யாதொன்றையும் ஆராயாமற் செய்ய லாகாது.

## ௬க. கல்விப்பயன்.

படிக்கிறதற்குப் பயன் அறிவுடையவராய் வருதலாம். அறிவுடையவர், தாம் அறிந்தபடியே பாவங்களை விலக்கி, நல்லொழுக்கம் உடையவராய் இருத்தல் வேண்டும்.

பிள்ளையே! நீ இந்த இரண்டாம் பாலபாடம் வாசித்து முடித்துவிட்டாய். இது படிக்க உனக்கு ஒரு வருஷ காலஞ் சென்றது, நீ நூறு வயசுக்கு இருக்கிறவனாய் இருந்தால் உன்னுடைய ஆயுளில் நூற்றில் ஒருபங்கு இது படிக்கிறதில் போய் விட்டது.

இந்த இரண்டாம் பாலபாடம் படித்ததினால் என்ன என்ன விஷயம் நீ புதிதாக அறிந்திருக்கிறாய் போன வருஷத்திலே நீ செய்தவைகளுள் எது எது தெரியாமற் செய்ததாக இப்போது உனக்குத் தெரி கின்றது? இந்த வருஷத்திலே உன்னுடைய அறிவு எவ்வளவு தேறியிருக்கின்றது. சபைப் பழக்கம் எப் படி என்று தெரியுமா? *

இனி, உன்னுடைய ஒழுக்கத்தில் என்ன என்ன திருத்தங்கள் இப் பாலபாடம் படிக்கத் தொடங்கிய பின் உண்டாயிருக்கின்றன? நீ சிறு வயசிலே செய்த பாவங்களில் எதை எதை இந்த வருஷத்திலே நீக்கி யிருக்கிறாய்?

---

* இந்த இடத்தில் உபாத்தியாயர் பிள்ளைகளிடத்தில் ஒவ்வொரு பாடத்தினுடைய பொழிப்பையும் வினாவுதல் வேண்டும்.

## கடிதம் எழுதுகிற முறை.

### ௯உ. தகப்பனுக்கு மகனெழுதுதல்.

மகா கனம் பொருந்திய தந்தையாரவர்களுக்கு வந்தனஞ் செய்து எழுதிக் கொள்ளும் விண்ணப்பம்.

ஐயா,

கடவுளுடைய திருவருளினாலும் தங்கள் ஆசீர்வாதத்தினாலும் அடியேன் இங்கு க்ஷேமமாயிருக்கிறேன், தாங்களும் அடியேனுடைய தாயார் தமையனார் முதலானவர்களும க்ஷேமமாயிருக்கிற சமாசாரம் அறிய விரும்புகிறேன்,

அடியேன் வித்தியாசாலைக்கு நியமமாகப் போய்ப் படித்து வருகிறேன், இப்பொழுது இரண்டாம் பாலபாடமும் எண்சுவடியும் படிக்கிறேன,

அடியேனுடைய சிறிய தாயாரவர்கள் அடியேனை மிகுந்த அன்புடனே நடத்துகிறார்கள், கனம்பொருந்திய உபாத்தியாயரவர்கள் வெகு பிரீதியுடனே பாடஞ் சொல்லுகிறார்கள்.

அடியேனுக்கு இரண்டு வேட்டி வாங்கி அனுப்பும்படி தங்களைப் பிரார்த்திக்கின்றேன்.

அடியேனுக்கு வேண்டும் நல்ல புத்திகளை அடிக்கடி கட்டளையிடும்படி வேண்டுகிறேன்,

| | |
|---|---|
| சிதம்பரம்<br>அக்ஷயஹு<br>ஐப்பசிமீ உ௯உ | இங்ஙனம்,<br>தங்கள் அன்புள்ள குமாரன்<br>குமாரசுவாமி, |

## ௬௧. மகனுக்குத் தகப்பனெழுதல்.

தீர்க்க-நீண்ட. ஆர்த்திரா-திருவாதிரை.

கடவுளுடைய திருவருளினாலே சிரஞ்சீவி குமார சுவாமிக்குக் கல்வியும் நல்லொழுக்கமும் ஈசுர பக்தியும் தீர்க்காயுசும் மேன் மேலும் பெருகுக.

என் அன்புள்ள குமாரனே,

நீ இந்தமீ ௨௬௨ எழுதிய கடிதம் வந்து சேர்ந்தது. கடவுளுடைய பெருங் கருணையினாலே, நானும் உன்னுடைய அன்புள்ள தாய் தமையன் முதலானவர்களும் க்ஷேமமா யிருக்கிறோம். உன் மாமனார் இரண்டு வாரம் சுரத்தினாலே பீடிக்கப்பட்டு இப்போது சௌக்கியம் அடைந்திருக்கிறார்.

நீ வித்தியாசாலைக்கு நியமமாகப் போய், கனம் பொருந்திய உபாத்தியாயர் அவர்களுக்கு அன்போடும் அச்சத்தோடும் பணிந்து நடந்து வித்தையை நன்றாகக் கற்றுக்கொள்ள வேண்டும். பின் வரும் நீதி மொழி இரண்டும் உனக்குத் தெரியுமே.

“வித்தை விரும்பு”
“இளமையிற் கல்”

உன் தமையன் மார்கழிமீ ஆர்த்திரா தரிசனத்தின்பொருட்டுச் சிதம்பரத்துக்கு வருவான். உனக்கு வேட்டியிரண்டும் அவனிடத்திற் கொடுத்து அனுப்புவேன். பெற்றுக்கொள்.

நீ தினந்தோறும் தவறாமல் கடவுளை அன்போடு தியானித்துத் தோத்திரம் பண்ணக்கடவாய்.

மாயூரம்
அக்ஷய வருஷ
ஐப்பசி மீ ௨௰௨

இங்ஙனம்
உன் வாழ்வை விரும்புகிற தந்தை
மே. வைத்தியலிங்கபிள்ளை.

---

## ௬௩. தமையனுக்குத் தம்பி எழுதுதல்.

மகா கனம் பொருந்திய தமையனாரவர்களுக்கு வந்தனஞ் செய்து எழுதிக்கொள்ளும் விண்ணப்பம்.

அண்ணா,

இவ்விடத்தில் அனைவரும் க்ஷேமம். தங்கள் க்ஷேமாதிசயங்களை அறிய விரும்புகிறேன்.

தங்கள் கட்டளைப்படி பயிர்வேலை தடையில்லாமல் நடந்து வருகின்றது. அடியேன் வித்தியாசாலைக்குத் தவறாமல் போய்ப் படித்து வருகிறேன்,

என் சிறுபிராயத்திலே பிதா மாதாக்கள் சிவபதம் அடைந்துவிட, தாங்களே அடியேன்மேல் இரக்கம் வைத்து, அடியேனை அன்ன வஸ்திரம் தந்து வளர்த்து, வித்தியாசாலைக்கு அனுப்பிப் படிப்பித்து வருகிறீர்கள், அடியேன் இயன்றமட்டும் கல்வியிலே தேர்ச்சி யடைந்து யாதாயினும் ஒரு உத்தியோகம் பெற்றுக்கொள்ளும் வரையும் இந்த நன்றியை இடையறாவண்ணம் செய்வீர்களென்று நம்பு

கிறேன். தாங்கள் செய்யும் நன்றியை அடியேன் மறவாதபடி அருள்செய்யும் பொருட்டுப் பெருங்கருணைக் கடலாகிய கடவுளைப் பிரார்த்தித்து வருகிறேன். ஔவையார் அருளிச்செய்த "நன்றி மறவேல்" என்னும் நீதிமொழி எப்போதும் என் மனசில் இருக்கின்றது.

தங்கள் தரிசனம் அடியேனுக்கு எப்போது கிடைக்குமோ அறியேன். தாங்கள் இவ்விடத்துக்குத் திரும்பும்பொழுது அடியேனுக்கு ஒரு விபூதிச் சம்புடம் வாங்கிக்கொண்டு வரும்படி வேண்டிக் கொள்ளுகிறேன்.

| | |
|---|---|
| சிதம்பரம் | இங்ஙனம் |
| அக்ஷய வருஷ | தங்கள் அதிப்பிரியனுகிய சகோதரன் |
| தைமீ நிஉ | மாசிலாமணி. |

---

## சுரு. தம்பிக்குத் தமையன் எழுதுதல்.

கடவுளுடைய திருவருளினாலே சிரஞ்சீவி தம்பி மாசிலாமணிக்குச் சகல நன்மைகளும் பெருகுக.

நீ அனுப்பின கடிதம் பெற்று வாசித்துச் சந்தோஷம் அடைந்தேன். நான் இரண்டு வாரத்துக்குள்ளே அவ்விடம் வந்து சேருவேன். வரும்பொழுது விபூதிச் சம்புடம் கொண்டு வருவேன்.

தம்பி, நீ சிறிதும் கவலைப்பட வேண்டாம். நீ எவ்வளவு காலத்துக்குப் படிக்க வேண்டுமோ அவ்வ

ளவு காலத்துக்கும் நான் உனக்கு அன்ன வஸ்திரமும் புஸ்தகம் முதலானவைகளும் தந்து உன்னை அன்போடு நடத்தும்படி கடவுள் கிருபை செய்வார்.

நீ படிப்பதற்கு மாத்திரமன்றிப் படித்தபடியே நடப்பதற்கும் பிரயாசப்பட வேண்டும். நன்னடை இல்லாதபோது கல்வியினாலே பிரயோசனம் இல்லை. நமக்கு உயிர்த்துணையாகிய கடவுளை ஒருபோதும் மறவாதே.

“நின்று மிருந்துங் கிடந்து நடந்துநினை
என்றுஞ் சிவன்றாளினை”.

கும்பகோணம்
அக்ஷய ௵
தைமீ ௬௨

இங்ஙனம்
உன் அன்புள்ள தமையன்
கனகசபை.

## பெருக்கல் வாய்பாடு.

| 1 | | 2 | | 3 | | 4 | | 5 | | 6 | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 1 | 1 | 2 | 1 | 3 | 1 | 4 | 1 | 5 | 1 | 6 |
| 2 | 2 | 2 | 4 | 2 | 6 | 2 | 8 | 2 | 10 | 2 | 12 |
| 3 | 3 | 3 | 6 | 3 | 9 | 3 | 12 | 3 | 15 | 3 | 18 |
| 4 | 4 | 4 | 8 | 4 | 12 | 4 | 16 | 4 | 20 | 4 | 24 |
| 5 | 5 | 5 | 10 | 5 | 15 | 5 | 20 | 5 | 25 | 5 | 30 |
| 6 | 6 | 6 | 12 | 6 | 18 | 6 | 24 | 6 | 30 | 6 | 36 |
| 7 | 7 | 7 | 14 | 7 | 21 | 7 | 28 | 7 | 35 | 7 | 42 |
| 8 | 8 | 8 | 16 | 8 | 24 | 8 | 32 | 8 | 40 | 8 | 48 |
| 9 | 9 | 9 | 18 | 9 | 27 | 9 | 36 | 9 | 45 | 9 | 54 |
| 10 | 10 | 10 | 20 | 10 | 30 | 10 | 40 | 10 | 50 | 10 | 60 |
| 11 | 11 | 11 | 22 | 11 | 33 | 11 | 44 | 11 | 55 | 11 | 66 |
| 12 | 12 | 12 | 24 | 12 | 36 | 12 | 48 | 12 | 60 | 12 | 72 |

## பிரித்தல் வாய்பாடு.

| 1 | | 2 | | 3 | | 4 | | 5 | | 6 | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 1 | 2 | 1 | 3 | 1 | 4 | 1 | 5 | 1 | 6 | 1 |
| 2 | 2 | 4 | 2 | 6 | 2 | 8 | 2 | 10 | 2 | 12 | 2 |
| 3 | 3 | 6 | 3 | 9 | 3 | 12 | 3 | 15 | 3 | 18 | 3 |
| 4 | 4 | 8 | 4 | 12 | 4 | 16 | 4 | 20 | 4 | 24 | 4 |
| 5 | 5 | 10 | 5 | 15 | 5 | 20 | 5 | 25 | 5 | 30 | 5 |
| 6 | 6 | 12 | 6 | 18 | 6 | 24 | 6 | 30 | 6 | 36 | 6 |
| 7 | 7 | 14 | 7 | 21 | 7 | 28 | 7 | 35 | 7 | 42 | 7 |
| 8 | 8 | 16 | 8 | 24 | 8 | 32 | 8 | 40 | 8 | 48 | 8 |
| 9 | 9 | 18 | 9 | 27 | 9 | 36 | 9 | 45 | 9 | 54 | 9 |
| 10 | 10 | 20 | 10 | 30 | 10 | 40 | 10 | 50 | 10 | 60 | 10 |
| 11 | 11 | 22 | 11 | 33 | 11 | 44 | 11 | 55 | 11 | 66 | 11 |
| 12 | 12 | 24 | 12 | 36 | 12 | 48 | 12 | 60 | 12 | 72 | 12 |

# வாய்பாடு.

## இலங்கை நாணயம்.

a

| | | |
|---|---|---|
| 2 கால்சதம் | ... | 1 அரைச்சதம். |
| 2 அரைச்சதம் | ... | 1 சதம். |
| 5 சதம் | ... | 1 ஐந்துசதக்காசு. |
| 10 சதம் | ... | 1 பத்துச்சதக்காசு. |
| 25 சதம் | ... | 1 கால்ரூபா. |
| 50 சதம் | ... | 1 அரைரூபா. |
| 100 சதம் | ... | 1 ரூபா. |

b

| | | |
|---|---|---|
| 5 ஐந்துசதம் | ... | 1 கால்ரூபா. |
| 10 ஐந்துசதம் | ... | 1 அரைரூபா. |
| 20 ஐந்துசதம் | ... | 1 ரூபா. |

c

| | | |
|---|---|---|
| 5 பத்துச்சதம் | ... | 1 அரைரூபா. |
| 10 பத்துச்சதம் | ... | 1 ரூபா. |
| 2 கால்ரூபா | ... | 1 அரைரூபா. |
| 2 அரைரூபா | ... | 1 ரூபா. |